ஓம்

# சிதம்பர ரகஸ்யம்

பஞ்சபூத [illegible] த்தில்
உள்ள ஸ்ரீ நடராஜர் ஆலய அமைப்பின் தத்துவார்த்தங்கள்
விளக்கிக் காட்டப்பட் டுள்ளன.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1920

விலை அணா 1



# சிதம்பர ரகஸ்யம்



ரிப்பன் பிரஸ், சென்னை] [விலை அணை 1

கடவுள் துணை

# சிதம்பர ரகசியம்

यस्यान्तस्थं सत्त्वं चराचरमिदं जगत् ।
[illegible] नटेशाय कैवल्यकारणाय ते नमः ॥

இப்பெரும் பூமண்டலத்துள்ளே எல்லாவிதத்தாலும் மிகச் சிறப்புற்றோங்கி விளங்கும் நம் பரதகண்டத்தில் அநேக சிவாலயங்களும், விஷ்ணுவாலயங்களும், வேறு பலதேவர் ஆலயங்களும் இருக்கின்றன. அவைகள் அனைத்தினும் கர்ப்பக்கிருகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், ஸ்தூபி, விமானம், பிராகாரம், கோபுரம் என்னும் இவைகள் ஒருதன்மையவாகவே காணப்படுகின்றன. இவையன்றி, ஒவ்வொரு ஆலயங்களிலும் அவ் வாலயத்தின் பிரதான தேவதா பிம்பம் கர்ப்பக்கிருகத்திலேயே யிருக்கின்றது. இங்ஙனம் ஒன்றுபோல எல்லா ஆலயங்களும் கட்டப்படுவதற்குச் சில முக்கிய காரணங்கள் உள. அவைகளை இங்கே சிறுபான்மை விளக்கிக் காட்டுவாம்:—

உலகத்திலேயுள்ள மாந்தரனைவரும் உண்மைக்காக அகப்பொருள்களை அறிந்துய்யும் ஆற்றல் பெற்றிலாததலால், யாவர்க்கும் தத்தம் சரீரவியல்பு எளிதிலே புலப்

படும்பொருட்டு, ஆலயங்கள் செங்கல் கருங்கற்களால் வெளி நோக்காகக் கட்டப்பட்டிருக்கின்றன. இவ் வாலயங்கள் இருதயகமலப் பிரஸ்தாரம் (இருதயகமலத்தை விரித்துக் குறிப்பது) எனவும், சரீரப் பிரஸ்தாரம் (சரீரத்தை விரித்துக் குறிப்பது) எனவும் இருவகைப்படுமென்று ஆகமங்கள் கூறுகின்றன. இவற்றுள், இருதயகமலப் பிரஸ்தாரத்தாற் சிதம்பர முதலிய சில ஸ்தலங்களும், சரீரப் பிரஸ்தாரத்தால் வேறு பல ஸ்தலங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. மனிதருள்ள தனித சொல்லாயும பொருளாயும் அமைந்துள்ள ஒவ்வொரு வஸ்துக்களும் இருதயகமலப் பிரஸ்தார ஆலயங்களாலும, யோகிகளறியவேண்டிய எழுவகைத்தாதுக்களின் நிலைமை சரீரப்பிரஸ்தார ஆலயங்களாலும் உருவகமாகக் காட்டப்படும். ஸ்ரீ பஞ்சாக்ஷரத்து ஒவ்வொரு எழுத்தின் பொருளென ஆகமங்களில் ஒரோவழி குறிக்கப்பட்ட அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயம் என்னும் பஞ்சகோசங்கள் சிவாலயங்களிலே ஐந்து பிராகாரங்களாகவும், பிரணவமொழிந்த ஸ்ரீ அஷ்டாக்ஷரப் பொருளெனப் பாஞ்சராத்திரத்தின் ஓரிடத்துக் கூறப்படும் சரீரத்திலடங்கிய ரசம், இரத்தம், மாமிசம், மேதை, என்பு, மச்சை, சுக்கிலம் என்னும் சப்த தாதுக்கள் விஷ்ணு வாலயங்களிலே ஏழு பிராகாரங்களாகவும் இருக்கின்றன. பிரணவங்கூட்டிற் சிவமந்திரம் ஆறெழுத்தும், நாராயணமந்திரம் எட்டெழுத்துமாகும். சிலவிடங்களிலே ஆலயங் கட்டுவதற்கு இடம் பொருள் குறைவுபடின், அங்கு தூல சூக்ஷ்ம காரணசரீரங்களைக் குறிக்கும் மூன்று பிராக

ரங்களேனும், அனைத்திற்கும் பொதுவாக ஒரே பிராகார மேனும் அமைப்பதுண்டு. ஒவ்வொரு சரீரத்திலும் யோகிக ளறியவேண்டிய மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூர கம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்னும் ஆறு தாரங் கள் இங்கு முறையே கர்ப்பக்கிருகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், ஸ்நானமண்டபம், அலங்காரமண்டபம், சபாமண்டபமெனக் குறிக்கப்படுகின்றன. ஒவ்வொரு கர்ப் பக்கிருகத்திலும் கமலமுகை போன்ற விமானம் ஒன்றிருக் கும். அதன் உட்புறத்திற்றான் கடவுளுடைய திருவுருவம அமைக்கப்படும்.

இனி இருதயகமலப் பிரஸ்தார வாலயங்களிலே இரு தயத்திலுள்ள விஷயங்கள் விரித்துக் குறிக்கப்படுமென்று முன்னே கூறியதற்குச் சிதம்பராலயத்தையே திருஷ் டாந்தமாக எடுத்து நிரூபிப்பாம்.

இச்சிதம்பரக்ஷேத்திர மஹிமை புராணங்களிலே மாத் திரம் புகழப்படுவதன்று. வேதத்தும் தரிசனோபநிடதத் திலே "சிதம்பரம் ஹிருதய மத்தியிலுள்ளது" என்று ஓதப் பட்டிருக்கின்றது. இதனால் இது விராட்புருஷனுடைய ஹிரு தய ஸ்தானமென்பது துணிபென்க. அதுபற்றியே புராண ங்கள், "இவ்வாலயங் கட்டும்பொழுது யோகமுதல்வராகிய ஸ்ரீபதஞ்சலிமுனிவர் சிதம்பர ரகசியமறிந்து அதனை விசுவ கர்மாவுக்கு அநுக்கிரகிக்க, அவன் அவராணையைச் சிரமேற் கொண்டு ஆலயஞ் சமைத்தனன்" என்று கூறுகின்றன. ஓர் மகாயோகியின் சரீரத்தை, வடக்கே தலையும் தெற்கே

பாதமுமாக வைத்து நோக்கின் அதுவும் இவ்வாலய அமைப்பும் ஒத்திருக்கும். இவ் வாலயத்துள்ளே ஆயிரக்கால் மண்டபம் தலையின் புறத்திருக்கும் ஆயிரவிதழுள்ள கமலமென்னப்படும் மூளையையும், சிவகங்கை அம் மூளையின் மேல் புறத்துள்ள சந்திரபுஷ்கரணியெனப்படும் அமுதவாபிகையையும் உவமையாய்ப் பெற்றிருக்கின்றன. சாக்கிராவஸ்தையிலே ஆன்மாவினுடைய அறிவு மூளையிலே விளங்குவது இயல்பாதலால், தேவமானத்தில் விடியற்காலமும் பிரதோஷகாலமுமாகிய மார்கழி ஆனிமாசங்களில் ஆயிரக்கால் மண்டபத்திலே ஆநந்த நடராஜமூர்த்திக்கு மஹாபிஷேகம் நடந்து வருகின்றது. இவற்றின் தென்புறத்திலே ஸ்ரீகுருமூர்த்தியும் ஜோதிர்லிங்கமும் எழுந்தருளி யிருக்குமிடம் விசுத்தி ஸ்தானமாகப் பாவிக்கப்படும். அதற்குத் தெற்கே "திருச்சிற்றம்பலம்" என்னும் மகாசபை யிருக்கின்றது. அங்கே பிரம விஷ்ணு ருத்திர மகேஶ்வர சதாசிவர்களுக்கென ஐந்து பீடங்க ளிருக்கின்றன. திருவைந்தெழுத்துக்க ளைந்தும் ஐந்துபடிகளா யிருக்கின்றன. அவ்விடத்துள்ள கதவு அவித்தை யெனப்படும். தத்துவ தாதுவிகங்களாகிய தொண்ணூற்றாறு பதார்த்தங்களுந் தொண்ணூற்றாறு பலகணிகளா யிருக்கின்றன. நடுவிலிருக்கும் நான்கு பொற்கம்பங்கள் நான்கு வேதங்களும், சுற்றியுள்ள இருபத்தெட்டு மரக்கம்பங்கள் இருபத்தெட்டு ஆகமங்களுமாம். இவைகளுள் அடங்கிய இடத்தைச் சுத்தவித்தையெனவும், ரகசியமுதலாய் ஸ்ரீநடராஜமூர்த்தி எழுந்தருளியிருக்கும் இடம்வரையில் உள்ள பீடம் பிரணவ பீட

மெனவும் படும். அப் பிரணவ பீடத்தின்கண்ணே சகளத் திருமேனியையுடைய ஸ்ரீமத் ஆநந்த நடராஜமூர்த்தி யெழுந்தருளி யிருக்கின்றனர். அதன்பின் வாயுபாகத்தில் சகளநிஷ்களமாகிய வியக்தாவ்வியக்த லிங்கமும், அதன்பின்னே ஆரண ஆகமங்களும் அறிந்தோத அரியதும், குணவரம்பு கடந்ததும், "திருச்சிற்றம்பலம்" என உயர்ந்தோரால் புகழ்ந் தேற்றப்படுவதுமாகிய அழியாப் பரசுடர்ச் சிவவொளிச் சிதாகாச வடிவும் விளங்காநிற்கும். இச் சிதாகாச வடிவினையே ஊனக்கண்ணாற் கண்டோர் இரகசியம் என்பர். கர்ப்பக்கிருகமாய் இவ்விடத்தே அகிலலோக மாதாவாகிய சிவகாமசுந்தரியென்னும் பராசத்தியாரோடு ஸ்தூலநடராஜமூர்த்தியும், இரத்தினமயமான சூக்ஷ்ம நடராஜமூர்த்தியும், சூக்ஷ்மதரமான மற்றோர் இலிங்கமும் உள்ளன. இரகசியத்தை நிஷ்கள மென்றும், வியக்தாவ்வியக்த லிங்கத்தைச் சகளநிஷ்கள மென்றும், ஸ்ரீமத் ஆநந்த நடராஜமூர்த்தியைச் சகளவடிவமென்றும் உரைக்கப்படும். இன்னும் கீழ்ப் புறத்திலே சண்டேசுவர ஸ்தானத்திலே பிரமதேவரும், தென்புறத்திலே விஷ்ணுமூர்த்தியும், வடபுறத்திலே வைரவ மூர்த்தி யென்னும் சங்கார ருத்திரரும் இருக்கின்றார்கள். விமானத்தின் மேலேயுள்ள ஒன்பது கும்பங்களும் வாமை முதலிய நவசத்திகளாம். அவ் விமானத்திலுள்ள கைமரங்கள் அறுபத்துநான்கு கலைகளையும், செப்போடுகள் இருபத்தோராயிரத்திருநூறும் மனிதனால் ஒவ்வொரு தினமும் விடப்படுகின்ற சுவாசங்களையும், ஆணிகள் எழுபத்தீராயிரமும் அச்சுவாச சஞ்சார ஆதாரமான எழுபத்தீராயிரம் நாடிகளை

யும் குறிக்கின்றன. மற்றும் அனேக ரகசியங்கள் முன் விளக்கியவற்றுள் அமைந்தன. இச்சபையின் தென்புறத்தே யுள்ள கனகசபை முற்கூறிய சபையின் அனேக பாகங்களைப் பெற்றதும், பதினெண் புராணங்களைப் பதினெண் கமபங்களாகப் பெற்றதுமாய், மணிபூரக ஸ்தானமாய் விளங்குகின்றது. இங்குள்ள சபைகள் ஐந்தும் ஐவகைக் கோசங்களை யுணர்த்துகின்றன.

அவையாவன: இராஜசபை (ஆயிரக்கால் மண்டபம்) அன்னமயகோசமும், தேவசபை (பேரம்பலம்) பிராணமய கோசமும், நிருத்தசபை மனோமயகோசமும், கனகசபை விஞ்ஞானமயகோசமும், சிற்சபை ஆநந்தமயகோசமுமாம். அன்றியும், திரிபுராதந்திரத்திற் சொல்லிய மூன்று கூடங்களும் மூலகூடம் தேவகூடம் ரகசியகூடம் என இங்குக் குறிக்கப்பட்டன. மனிதருடைய ஹிருதயம் சரீரத்தின் நடுவிலிராமல் சிறிது இடதுபுறத்தே விலகியிருத்தலால், இங்கும் ஆலயத்தின் சரிநடுவுக்குச் சிறிது இடப்புறத்தே கர்ப்பக்கிருகம் அமைந்திருக்கின்றது. ஹிருதயத்திலே இரத்தம் பிரவேசிக்கும் வழி நேரிலின்றிப் பக்கங்களிலிருப்பதால், இங்கும் வழிகள் கர்ப்பக்கிருகத்தின்பக்கங்களி லமைந்திருக்கின்றன. இச் சிற்சபையின் தென்புறத்தே மகாவிஷ்ணு ஸ்தானமும், அதற்குத் தெற்கே சங்கார நிருத்தமூர்த்தி ஸ்தானமும், அதற்குத் தெற்கே கணபதி ஸ்தானமும், தருமவடிவாகிய இடபதேவ ஸ்தானமும், கோபுரமும் இருக்கின்றன. ஐந்து ஆவரண மதில்களும் ஒரேவித அளவில் அமைந்தன. சரீ

ரத்திலும் பிராணன் பன்னிரண்டங்குலம் அதிகமென்றும் யோகநூற் பிரமாணங்கொண்டே இரண்டாவது மதிலிற் கோபுரம் வைக்கப்பட்டிருக்கின்றது.

இத்தகைய மகாமேன்மை பொருந்தியது சிதம்பராலயம். இவ்வாலயத்திலே சாஸ்திர விதிப்படி மெய்யன்போடு சுவாமி தரிசனஞ் செய்யின் ஞானமுதிக்கும்; பந்தநீங்கும்; பூரணத்துவ முண்டாம்; ஆநந்தம் விளையும்; ஆன்மநிலை விளங்கும்; அத்வைதமுத்தி சித்திக்கும்.

இவ் வுண்மைகளை அறியும் அறிவு சிறிதேனும் இல்லாத வேதபாகியர்களின் புன்மொழிகளைக் கேட்டு "இது என்ன! கல், மண், செங்கல்தானே" என்று எண்ணலாகாது. ஒருவன் பூகோளத்தைப் படித்தறிய விரும்பி அதற்குத் துணைக்கருவியாய்க் கொண்ட பூகோள படத்தை "இது ஏதோ கோடுகள்; பூமியன்று" என்று நினைப்பானாயின், அவன் கருத்து முற்றுப்பெறுவ தெவ்வாறு? அப் படத்தையே பூமியென்று நினைத்தாலல்லவோ முற்றுப்பெறும். அதுபோல, இவ்வாலயத்தைக் கண்டவுடனே வேறொன்றும் நினையாது 'இது ஏதோ ஒரு மகா யோகியின் இருதயகமலம்' என்றும், 'கடவுளுடைய திருவருள் இவ்விடத்திலே நிறைந்திருக்கின்றது' என்றும், 'இவ்வித நிலையே முத்திக்கு வழி' என்றும் அறிந்து அவ்வழியைச் சிறிது சிறிதாகப் பற்றுதல்வேண்டும்.

ஆரிய சகோதரர்களே! நம் தேசத்திலுள்ள தேவாலயங்களின் உண்மைகளை நன்றாக ஆராய்ந்தறிந்து கடவுளை

இடைவிடாது சிந்தித்து உய்யுங்கள். நாஸ்திகர், கிறிஸ்தவர் முதலாயினோர் வார்த்தைகளைக் கேட்டு மதிமயங்காதிர்கள். நாம் உய்யும்பொருட்டே நம் பெரியோர்கள் அவ்வப்பொழுது எவ்வளவு துன்பம் வரினும் அவைகளுக்குச் சிறிதும் அஞ்சாது நம் அருமையாகிய சமயத்தைக் காத்துவந்தார்கள். அதுபோல் அவர் சந்ததியிற் பிறந்தவர்களாகிய நீங்களும், உங்கள் உங்களால் இயன்றளவு பிரயாசைப்பட்டு நம் சமயத்தைப் பாதுகாத்தருளுங்கள். அப்படிச் செய்தாலன்றி நாம் ஆரியர்களாகோம். சகோதரர்களே! உங்களுக்கு நல்லறிவும் நற்புகழும் நன்னிலையும் நன்மேனியும் ஐக மத்தியமும் கைகூடுமாறு, ஸ்ரீமத் ஆநந்த நடன குஞ்சிதபாதன் திருவருளைப் பிரார்த்திக்கின்றோம். சுபமஸ்து.

சிதம்பர ரகசியம்

முற்றிற்று.



# சிதம்பர மஹிமை

## ஸ்தல மஹிமை

எல்லாவறிவும், எல்லாமுதன்மையும், எல்லாவநுக்கிரகமும் உடைய முழுமுதற் கடவுள் தாம் ஒருவரேயாய், பசுக்களாகிய ஆன்மாக்களெல்லாந் தமக்கு என்றும் உடைமைப் பொருள்களேயாகத் தாம் என்றும் உடையவராயே நின்று, பசுபதி எனப்படுஞ் சிவபெருமான் பிரபஞ்சம் எங்குமாகி நீக்கமற வியாபித்து நிற்பர். ஆயினும், அவ்வுண்மை யாவருக்கும் விளங்காது; ஆதலினாலே, முத்தியடைதல் எளிதன்று. இதனைச் சிவபெருமானே திருவுளங்கொண்டு, தம்மை ஆன்மாக்கள் வழிபட்டுய்யும்பொருட்டு எண்ணில்லாத முக்கிய ஸ்தலங்களைப் பூமியில் வைத்தருளினார். அவைகளுள்ளே, அறுபத்தெட்டு ஸ்தலங்கள் சிறந்தன; அவ்வறுபத்தெட்டுஸ்தலங்களுள்ளே, ஆறு ஸ்தலங்கள் சிறந்தன; அவ்வாறு ஸ்தலங்களுள்ளே, திருவாரூர், காசி, சிதம்பரம் என்னும் மூன்று ஸ்தலங்கள் சிறந்தன. திருவாரூரிலே பிறந்தவர்களும், காசியிலே இறந்தவர்களும், சிதம்பரத்திலே சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்தவர்களும் முத்தியை அடைவார்கள்.

திருவாரூரிலே பிறத்தல், முன்செய்த புண்ணிய மிகுதியினாலே, தானே நேர்படினல்லது செயற்கையால் அடை

யத்தக்கதன்று. காசியில் இறக்கலாமெனின், பிறர் பொருள் கொள்ளாது, பாவதனுக்குப் பயந்து தரும நெறியினாலே சம்பாதித்த பொருள்கொண்டு, ஜன்மதேசத்தை விடுத்து, வழியிலே இறவாது உயிர்தாங்கிச் சென்று காசியை அடைந்து, இறக்குமவரையும் நல்லொழுக்கத்தோடும் அத் திருப்பதியில் இருந்து இறப்பது எளிதின் முடிவதன்று. சிதம்பரத்திலோவெனிற் சிவபெருமானுடைய திருவடிகளைத் தரிசித்தமாத்திரத்தே முத்தி சித்திக்கும். இன்னும், தக்ஷிணதேசத்தார் சிதம்பரத்தை நீங்கி முத்தியைத் தேடிக் காசியிலே சென்றால், அது முத்தியைக் கொடுப்பதில்லை; உத்தர தேசத்தார் 'சிதம்பரம் முத்திதரும்' என்று வந்து சேர்ந்தால், இது முத்தியைக் கொடுக்கும். ஆதலினாலே, சிதம்பரமே எல்லா ஸ்தலங்களினுஞ் சிறந்தது.

பிண்டமும் பிரமாண்டமும் சமம். பிண்டமாகிய சரீரத்தில் இடப்பக்க நாடியாகிய இடைக்கும், வலப்பக்க நாடியாகிய பிங்கலைக்கும் நடுவில் உள்ள சுழுமுனை நாடியும், பிரமாண்டத்தில் உள்ள இப்பரதகண்டத்தில் இலங்கைக்கும் இமயமலைக்கும் நடுவில் உள்ள தில்லையும் சிவபெருமான் ஆநந்த நிருத்தஞ்செய்யுந் தானமாம்.

சரீரம் பிரமபுரம்; சரீரத்தினுள்ளே இருக்கும் இருதய ஸ்தானம் தகரமாகிய புண்டரீக வீடு; இருதய ஸ்தானத்தினுள்ளே இருக்கும் பிரமமாகிய சிவம் ஆகாசம். புறத்தும், இப்படியே பிரமாண்டம் பிரமபுரம்; பிரமாண்டத்தினுள்ளே இருக்கும் தில்லைவனம் புண்டரீக வீடு; தில்லைவனத்தில்

நிருத்தஞ் செய்யும் சிவம் ஆகாசம். இவ்வாகாசம் பூதாகாசம்போற் சடமாகாது சித்தேயாம்; ஆதலாற் சிதம்பர மெனப்படும். இச்சிதம்பரம் எக்காலமும் நீக்கமின்றி விளங்கும் ஸ்தானமாதலால், இத் தில்லையும் சிதம்பரம் எனப் பெயர் பெறும்.

சிதம்பரத்திலே ஞானசபையிலே, சிவபெருமான் சிவகாமி யம்மையார் காண, ஆன்மாக்கள் பொருட்டு அனவரதமும் ஆநந்த நிருத்தஞ் செய்தருளுவர். சபாநாயகர், கோடி சூரியருடைய ஒளிபோலும் ஒளியும் திருப்புன்முறுவலையுடைய ஒரு திருமுகமும், மூன்று திருக்கண்ணும், கங்கையையும் பிறையையும் கொன்றைமாலையையும் தாங்கிப் பின்றாங்காநின்ற திருச்சடையும், சங்கக்குண்டலம் பொருந்திய வலத்திருச்செவியும், திருத்தோடுபொருந்திய இடத்திருச்செவியும், திருநீலகண்டமும், டமருகம்பொருந்திய திருக்கரம் அபயகரம் என்னும் வலத்திருக்கரம் இரண்டும், அக்கினியகல் பொருந்திய திருக்கரம் டோளகரம் என்னும் இடத்திருக்கரம் இரண்டும், புலித்தோலை ஆடையாகக் கொண்டு கச்சையுடைத்தாய் நெறிப்புப் பொருந்தி விளங்குந் திருவரையும்,முயலகன்மேல்ஊன்றியவலத்திருப் பாதமும், தூக்கி வளைத்த இடத்திருப்பாதமும் உடையர். சிவகாமியம்மையார், பச்சைநிறத்திருமேனியும், திருக்கழுத்திலே பொருந்திய திருமங்கல சூஸ்திரமும், செங்கழுநீர் மலர் பிடித்த வலத்திருக்கையும், கடிக்கீழ்த் தொங்கவிட்ட இடத்திருக்கையும், மிக ஒடுங்கிய திருநிலையும் உடையர்.

சபாநாயகருடைய வடிவம் ஸ்ரீபஞ்சாக்ஷர வடிவம்; வாச்சிய மந்திரமாகிய சிவசத்தி அவருக்கு உண்மை வடிவம்; வாசக மந்திரம் அவருக்குக் கற்பித வடிவம். அவருடைய ஆநந்த நிருத்தம் பஞ்சகிருத்தியம். சிருஷ்டி கிருத்தியம் டமருகத்தினும், திதி கிருத்தியம் அபயகரத்தினும், சங்கார கிருத்தியம் அக்கினியினும், திரோபவ கிருத்தியம் ஊன்றிய பாதத்தினும், அநுக்கிரக கிருத்தியம் குஞ்சித பாதத்தினும் தோன்றும். அவ்வாநந்த நிருத்தத்துக்கு நிலைக்களமாகிய சபை சிவசத்தியால் அதிஷ்டிக்கப்பட்ட சுத்த மாயா மயம். சிவசத்தி, அக்கினியோடு சூடுபோலச் சிவத்தோடு நீக்கமின்றி உள்ள திருவருள்.

வியாக்கிரபாத முனிவர், பதஞ்சலி முனிவர், உபமன்யு முனிவர், திருவுடை யந்தணர்கள், வியாச முனிவர், சுக முனிவர், சௌனக முனிவர், ஜைமினி முனிவர், சூத முனிவர் முதலாயினோர் எண்ணிறந்தோர்கள், சிதம்பரத்திலே நியமமாகச் சிவகங்கையிலே ஸ்நானஞ்செய்து, நடேசப் பெருமானுடைய ஆநந்த நிருத்தத்தைத் தரிசித்து வணங்கித் துதித்துச் சிவாநந்தப் பெருவாழ்வு அடைந்தார்கள். உபமன்யு முனிவர் கிருஷ்ணருக்குச் சிவதீக்ஷை செய்து சிவபூஜை எழுந்தருளப் பண்ணிக்கொடுத்த சைவாசாரியர். ஜைமினி முனிவர் நடேசப்பெருமானை வேதபாத ஸ்தவத்தினாலே துதித்தவர். வேதபாத ஸ்தவமாவது முதன் மூன்று பாதமுந் தமது வாக்காகவும், நான்காம்பாதம் வேதமாகவும் செய்யப்பட்ட தோத்திரம். [ஸ்தவம் - தோத்திரம்.]

பரங்கருணைத் தடங்கடலாகிய நடேசப்பெருமானுடைய இலக்கணங்களை உண்மைநூல் வாயிலாக அறிந்து, நல்லொழுக்கத்தின் வழுவாது நிலைகொண்டு, அவருடைய விளக்கத்துக்கு இடமாகிய திருவுருவை விராட்புருடனாகிய பிரமாவினது பிரமாண்ட சரீரத்தின் இருதய கமலமாகிய தில்லையிலே நாடோறும் விதிப்படி அன்போடு தரிசித்துக் கொண்டு வந்தவர், அந்நடேசப் பெருமானைத் தமது பிண்ட சரீரத்தினது இருதய கமலமாகிய தகரத்திலே தியானித்துத் தரிசித்துப் பாசநீங்கி முத்தி அடைவர். இதுவே தகர வித்தை. தகரவித்தை சாந்தோக்கியோபநிடதத்திலும், கைவல்லியோபநிடதத்திலும் பேசப்பட்டது.

சிதம்பரத்துக்குச் சிதம்பர மான்மியம், புண்டரீகபுர மான்மியம், வியாக்கிரபுர மான்மியம், ஏமசபா மான்மியம், தில்லைவன மானமியம் என வடமொழியில் ஐந்து மான்மியங்கள் உள்ளன. (நாவலர் சிதம்பர மான்மியம்.)

## தீர்த்த மஹிமை

சிதம்பரத்திலே பத்துத் தீர்த்தங்கள் உள்ளன. அவையாவன:—

1. சிவகங்கை—இது கனகசபைக்கு வடக்கே உள்ளது.

2. குய்ய தீர்த்தம்—இது திருக்கோயிலுக்கு வடகிழக்கே உள்ள சமுத்திரத்திற் பாசமறுத்த துறை.

3. புலிமடு—இது திருக்கோயிலுக்குத் தெற்கே உள்

4. வியாக்கிரபாத தீர்த்தம்—இது திருக்கோயிலுக்கு மேற்கே, திருப்புலீச்சுரத்துக்கு எதிரே உள்ளது. இது இளமைநாயனார் குளம் எனவும் பெயர் பெறும்.

5. அனந்த தீர்த்தம்-இது திருக்கோயிலுக்கு மேற்கே திருவனந்தேச்சுரத்துக்கு முன் உள்ளது.

6. நாகசேரி—இது திருவனந்தேச்சுரத்துக்கு மேற்கே உள்ளது.

7. பிரம தீர்த்தம்-இது திருக்கோயிலுக்கு வடமேற்கே திருக்களாஞ்சேரியில் உள்ளது.

8. சிவப்பிரியை—இது திருக்கோயிலுக்கு வடக்கே பிரமசாமுண்டி கோயிலுக்கு முன்னே உள்ளது.

9. திருப்பாற் கடல்-இது சிவப்பிரியைக்குத் தென்கிழக்கே உள்ளது.

10. பரமானந்த கூபம்-இது கனகசபைக்குக் கிழக்கே உள்ளது.

சிவகங்கை சிவவடிவம். அது கோடி ஜன்மார்ஜிதமான பாவ சமூகங்களைத் தனது மகாத்மிய புண்ணிய சிரவணத்தினாற் போக்க வல்லமையுள்ளது. அச்சிவகங்கையின் தென் கரையில் சிவபெருமான் ஆநந்தத்தாண்டவம் செய்துவருகின்றார் .அதுகதீர்த்தம் உலகின்கண்ணுள்ள எல்லாப் புனித தீர்த்தங்களினும் மிகப் புனிதமுடையது. புண்ணியத்தை விருத்திசெய்து வீடளித்தற்குப் பெரிய காரணமானது. தங்கமயமான பங்கய மலர்ந்து எங்கும் மணம் வீசும் அத்

தீர்த்தத்தில் பக்தியில்லாது, விளையாட்டாகவாயினும் அருந்தல் குளித்தல் ஸ்நான முதலியவைகள் செய்தவரைப்பார்த்த எமனுடைய ஹிருதயம் நடுங்கும். அவர்களுடைய வரவை நினைத்துச் சிவலோகம் விசாலத்தை அபேக்ஷிக்கும். புண்ணியம் நிறைந்த அத் தீர்த்தத்தில் ஒருமுறை ஸ்நானஞ் செய்தவன் பிறகு எத்தலத்தில் எவ்விதமா யிருப்பினும் சிவலோகத்தை யடைவான். அதில் ஸ்நானஞ்செய்து, சிற்றம்பலத்தில் நர்த்தனஞ் செய்யும் சிவபெருமானைத் தரிசித்துச் சிவ பஞ்சாக்ஷரத்தை ஆயிரத்தெட்டு உரு ஜெபித்தவன் சகல பாவங்களினின்றும் விடுபட்டு சிவரூபத்தை யடைவான். மேஷ சங்கரமணத்தில் ஸ்நானஞ் செய்தவர்கள் உடனே மகா பாவங்களினின்றும் விடுபடுவார்கள். ஆனிமாசப் பிரவேசத்திலும், அந்தமாசத்திய கிருஷ்ணபக்ஷ அஷ்டமியிலும் ஸ்நாநஞ் செய்தவர்கள் அளவிறந்த சிவ புண்ணியங்களை அடைவார்கள். துலா மாசத்தில் உத்திர நக்ஷத்திரத்தில் ஸ்நானஞ் செய்தவர்கள் ஜனன மரணத்தினின்றும் நீங்குவார்கள். தை மாசத்தில் புஷ்ய நக்ஷத்திரத்தில் ஸ்நானஞ் செய்தவர்கள் தேவர்கட்கெல்லாம் தலைவராவார்கள். பங்குனி மாசத்தில் உத்திர நக்ஷத்திரத்தில் ஸ்நானஞ் செய்தவர்கள் சிவபெருமானது சாரூப்பியத்தை யடைவார்கள். சுக்கிரவாரத்தில் ஸ்நானம் பண்ணினவர்களின் புண்ணியவிசேஷத்தைச்சொல்லமுடியாது. மாசிமாசம் கிருஷ்ணபக்ஷம் அஷ்டமியில் ஸ்நானஞ் செய்தவர்கள் பிதுர் குலங்களில் நூறு குலங்களை மோக்ஷத்திற் சேர்ப்பார்கள். ஆவணி மாசத்தில் ஸ்நானஞ் செய்து தர்ப்பணஞ் செய்த

வர்கள் இருபத்தொரு குலங்களைத் திருப்திசெய்விப்பார்கள். மார்கழிமாசத்தில் சுக்கிலபக்ஷத்திலாவது கிருஷ்ணபக்ஷத்திலாவது பிதுருக்களை உத்தேசித்து அச் சிவகங்கைக் கரையில் சிராத்தஞ் செய்பவர்கள் ஏழு குலங்களைத் தாரணஞ் செய்விப்பார்கள். சந்திர சூரியர்களுடைய கிரஹண காலங்களிலும், திருவாதிரை நக்ஷத்திரதிலும் ஸ்நானஞ்செய்து சிராத்தம் புரிபவர்கள், கதியற்றவர்களாய்ப் பசியாலும் தாகத்தாலும் வருந்துகிறவர்களான தமது குல பிதுருக்களைப் பிரமகற்பம்வரையில் நித்திய திருப்தர்களாகச் செய்வார்கள். அப் புண்ணிய தடாகக்கரையில் பிராமண போஜனஞ் செய்துவைப்பவர்கள் தமது வம்சங்களுடன் சிவசாயுஜ்ஜியத்தை யடைவார்கள்.

பரமானந்த கூபம் சிவசக்தி வடிவம். அதிலே சுக்கிரவாரம் நவமி என்பவைகளிலே ஸ்நானஞ் செய்வது விசேஷம். ஐப்பசிமாச சுக்கிலபக்ஷநவமி, மாசிமாச சுக்கிலபக்ஷ சதுர்த்தசி, சூரியகிரஹணம், சந்திரகிரஹணம் என்பவைகளிலே ஸ்நானஞ்செய்வது மகாவிசேஷம். பரமானந்த கூபத்திலே ஐப்பசிமாசம் சுக்கிலபக்ஷ நவமியிலே ஸ்நானஞ்செய்து அன்றுமுதல் ஒரு வருஷகாலம் இடைவிடாது நாடோறும் அத்தீர்த்தத்தில் ஓர் உழுந்தளவு உட்கொண்டுவருவது உத்தமோத்தம புண்ணியம்.

தைஅமாவாசைதோறும் சிவபெருமான் சிவகங்கைமுதல் பரமானந்தகூபம் இறுதியாகிய பத்துத் தீர்த்தத்திலும் எழுந்தருளித் தீர்த்தங் கொடுத்தருளுவர். அத்தினத்தில் இப்பத்துத் தீர்த்தத்திலுஞ் சிவபெருமானைச் சேவித்துக் கொண்டு, உடன்சென்று, சிரத்தையோடு ஸ்நானஞ் செய்வது மகா புண்ணியம்.

| | அ. | ப. |
|---|---|---|
| ரிப்பன் காளப்பாட்டு ... | 2 | 0 |
| ஆத்திசூடிவெண்பா உரை | 12 | 0 |
| உரிச்சொல் நிகண்டு உரை | 8 | 0 |
| விடுகவிமஞ்சரி ... | 2 | 0 |
| ஸ்ரீ திலகர் விசாரணை ... | 12 | 0 |
| அறப்பளீசுர சதகம் உரை | 10 | 0 |
| குமரேச சதகம் உரை ... | 1 ரூபா | |
| பிரகலாத சரித்திரம் ... | 4 | 0 |
| திருவள்ளுவர் சரித்திரம் | 1 | 6 |
| சமயகுரவர் நால்வர் சரித்ரம் | 3 | 0 |
| சாவித்திரி சரித்திரம் ... | 1 | 0 |
| மனோமோகனராஜன்சரித்ரம் | 1 | 6 |
| புருஷத்வேஷபூதகிசரித்ரம் | 1 | 6 |
| கடன்பட்ட கந்தன் சரித்ரம் | 1 | 0 |
| அவிவேக பூரணகுரு கதை | 1 | 6 |
| பச்சையப்பமுதலியார் சரித் | 10 | 0 |
| சங்கீத சாஸ்திர சரித்திரம் | 4 | 0 |
| சிதம்பர ரகஸ்யம் ... | 1 | 0 |
| கஜேந்திர மோக்ஷம் ... | 2 | 0 |
| இனிதுநாற்பது உரை ... | 3 | 0 |
| இன்னாநாற்பது உரை ... | 3 | 0 |
| களவழிநாற்பது உரை ... | 3 | 0 |
| கார்நாற்பது உரை ... | 3 | 0 |
| சிறுபஞ்சமூலம் உரை ... | 8 | 0 |
| நான்மணிக்கடிகை உரை | 8 | 0 |
| முதுமொழிக்காஞ்சி உரை | 4 | 0 |
| ஏலாதி உரை ... | 6 | 0 |
| திரிகடுகம் உரை ... | 4 | 0 |
| நீதிநெறி விளக்கம் உரை | 8 | 0 |
| வியாதிமூலம் ... | 0 | 6 |
| பணவிடுதூது ... | 2 | 0 |
| டிங்கவுண்டுமாலை ... | 1 | 0 |
| காங்கிரஸ் மகாசபை ... | 4 | 0 |

| | அ. | ப. |
|---|---|---|
| நால்வர் நான்மணிமாலை மூலமும் உரையும் ... | 12 | 0 |
| திருவாரூர் நான்மணிமாலை மூலமும் உரையும் ... | 8 | 0 |
| உவமானசங்கிரகம் உரை | 4 | 0 |
| சதாசிவரூபம் உரை ... | 4 | 0 |
| சௌந்தரியலகரி உரை... | 6 | 0 |
| ஸ்ரீ கந்தரநுபூதி உரை ... | 6 | 0 |
| கந்தரலங்காரம் உரை ... | 5 | 0 |
| கந்தர் சஷ்டி கவசம் உரை | 5 | 0 |
| ஸ்ரீ விநாயக கவசம் உரை | 5 | 0 |
| கல்வளையந்தாதி உரை | 5 | 0 |
| மறைசையந்தாதி உரை.. | 5 | 0 |
| சரஸ்வதியந்தாதி உரை... | 5 | 0 |
| கபிலரகவல் உரை ... | 3 | 0 |
| வீரசைவ வினாவிடை ... | 5 | 0 |
| சைவ சமய விளக்க வினாவிடை ஆசௌச வினாவிடை | 8 | 0 |
| பிரச்னோத்தர ரத்நமாலிகை | 2 | 0 |
| பர்த்ருஹரிவைராக்யசதகம் | 3 | 0 |
| உப[illegible]ஞார்த்த தீபிகை ... | 0 | 6 |
| பு[illegible]ணைத்தார பாடல் ... | 2 | 0 |
| [illegible]திரகிரியார் புலம்பல் | 1 | 6 |
| [illegible]யாத்திரி மான்மியம் ... | 5 | 0 |
| [illegible]தலயாத்திரைபொதுவிதி | 6 | 0 |
| பரமானந்த தீபம் ... | 1 | 0 |
| தாலாட்டுப் பிரபந்தம் ... | 4 | 0 |
| சைவ தூஷண பரிகாரம் | 4 | 0 |
| புஷ்பவிதி, புஷ்பபலன்... | 2 | 0 |
| சிவபூஜைத் திரட்டு ... | 3 | 0 |
| சிவபூஜையகவல் ... | 1 | 0 |
| அஷ்டோத்தர சதநாமாவளி | 4 | 0 |
| ஸ்ரீ சுப்ரஹ்மண்யர் சகஸ்ரம் | 2 | 0 |

ஸ்ரீ விவேகாநந்த விஜயம்: ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளின் திவ்விய சரித்திரமும், அவர் செய்த அற்புதமான பிரசங்கத் திரட்டும்: விலை ரூபா 1-8-0

---

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்: ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளின் குருமூர்த்தியாகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் திவ்விய சரித்திரமும், கதாமிருதமும், உபதேச வாக்கியங்களும்: விலை ரூபா 1-4-0

---

ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரித்திரம்: ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் ஜனனமுதல் மஹாசமாதிவரையில் உள்ள விரிவான சரித்திரம்: விலை ரூபா 2-0-0

---

ஸ்ரீ சங்கர விஜயம்: ஆதி சங்கராசாரியார் திவ்விய சரித்திரம்: (ஸ்ரீ சங்கரர், சாரதாம்பாள் படங்களுடன்) ரூபா 1-4-0

---

திவ்விய தேச யாத்திரையின் சரித்திரம்: ஆரிய தேசமாகிய நமது இந்தியாவிலுள்ள திவ்விய ஸ்தல, திவ்விய தீர்த்த, திவ்விய பர்வதாதிகளின் மஹிமையும், விசேஷங்களும்: முதல்பாகம் (வட தேசங்கள்) விலை ரூபா 2-0-0

---

தக்ஷிண இந்தியா சரித்திரம் ஷை 2-ம் பாகம் (தென் தேசங்கள்) விலை ரூபா 5-0-0

---

பட்டினத்துப் பிள்ளையார் என்னும் திருவெண்காட்டடிகள் சரித்திரம்: விலை அணா 12

---

ஸ்ரீ பக்தலீலாம்ருத வசனம்: 82 பக்தர்களின் திவ்விய சரித்திரம்: விலை ரூபா 3-0-0

---

பெரியபுராண, திருவிளையாடற் புராண வசனச் சுருக்கம்: பாக்கெட் அளவு: விலை ரூபா 1-4-0

---

சிவக்ஷேத்திர விளக்கமும், சிவக்ஷேத்திராலய மஹோத்ஸவ உண்மை விளக்கமும்: ஒவ்வொரு க்ஷேத்திரமும் இருக்கும் இடத்தையும், அதன் சமீப ரயில்வே ஸ்டேஷனையும் காட்டும் விவரமான அட்டவணையுடன்: விலை ரூபா 1-8-0



# ஸ்ரீ தத்துவபோதம்

(வினா விடை)



ரிப்பன் பிரஸ், சென்னை] [விலை அணா 1

உ

ஓம் ப்ரஹ்மணே நம:

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகள்

அருளிச்செய்த

# ஸ்ரீ தத்துவபோதம்

(வினா விடை)

இஃது

தஞ்சைமாநகரம்

வெ. குப்புஸ்வாமிராஜு அவர்களால்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

[4-வது பதிப்பு]

1921

விலை அணா 1

ஓம் ஸ்ரீகணேசாய நம:

# ஸ்ரீ தத்துவபோதம்



## மங்கலம்

எங்குமாய் நின்றி லங்கு மிணையிலா வீசன் றானே
சங்கர பகவற் பாதத் தனிப்பெயர் பூண்டு வந்து
நங்குறை தீரு மாறு நவின்றனன் பாடி யாதி
யிங்கவன் றன்னை யேத்தி யியற்றுவன் றத்வ போதம்.

## நூல்

சாதன சதுட்டய சம்பன்னர்களாகிய அதிகாரிகளுக்கு மோக்ஷசாதனமாகிய தத்துவவிவேகப்பிரகாரத்தைச் சொல்லுவாம்.

வினா:—சாதன சதுட்டய மென்பது யாது?

விடை:—(க) நித்தியாநித்திய வஸ்து விவேகம் (நித்திய அநித்தியப் பொருள்களைப் பகுத்தறிதல்), (உ) இகாமுத்திரார்த்த பலபோக விராகம் (இம்மை மறுமைப் பயன்களாகிய போகங்களில் இராகமின்மை), (ங) சமாதி சட்சம்பத்தி (சமமுதலிய ஆறனடைவு), (ச) முமுக்ஷுத்துவம் (மோக்ஷத்தை விரும்புதல) என்பனவாம்.

வினா :— நித்தியாநித்திய வஸ்து விவேகமென்பது யாது?

விடை.—ஒன்றாகிய பிரமம் நித்தியப்பொருள்; அதற்கு அநித்தியமான யாவும் அநித்தியப்பொருளாமென்னும் இதுவே நித்தியாநித்திய வஸ்து விவேகமாம்.

வினா—விராகமென்பது யாது?

விடை:—இகலோக பரலோக போகங்களில் இச்சையில்லாமையாம்.

வினா:—சமாதிசாதன சம்பத்தி யென்பது யாது?

விடை—சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, சமாதானம் என்பனவாம்.

வினா—சமம் என்பது யாது?

விடை:—சமமென்பது மனதை யடக்குதலாம்.

வினா—தமம் என்பது யாது?

விடை:—கண்முதலிய புறவிந்திரியங்களை யடக்குதல் தமமாம்.

வினா:—உபரதி என்பது யாது?

விடை:—உபரதியென்பது சுவகர்ம அநுஷ்டானமேயாம், அதாவது, பாஹ்யகர்மங்களினின்றும் நிவர்த்தியாதலேயாம்.

வினா:—திதிக்ஷையென்பது யாது?

விடை:—சீதம், உஷ்ணம், சுகம், துக்கம் முதலியவற்றைச் சகித்தல் திதிக்ஷையாம்.

வினா:—சிரத்தை யென்பது யாது?

விடை:—குருவாக்கியம் வேதாந்தவாக்கியம் முதலியவற்றில் உண்டாகும் விசுவாசம் சிரத்தையாம்.

வினா:—சமாதானமென்பது யாது?

விடை:—சித்த ஏகாக்கிரத்தன்மை (மனவொருமை) சமாதானமாம்.

வினா:—முமுக்ஷுத்துவம் என்பது யாது?

விடை:—மோக்ஷம் எனக்கு உண்டாகவேண்டுமென்னும் இச்சை முமுக்ஷுத்துவமாம்.

இது சாதனசதுஷ்டயம். இதனையுடையவர் தத்துவ விவேகத்திற்கு அதிகாரிகளாகின்றனர்.

வினா:—தத்துவவிவேகமென்பது யாது?

விடை:—ஆத்மா சத்தியம், அதற்கன்னியமான யாவும் மித்தையென்னும் நிச்சயம் தத்துவவிவேகமாம்.

வினா:—ஆத்மா வென்பது யாது?

விடை:—ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களுக்கு வேறாய், பஞ்சகோசங்களுக்கு அப்பாற்பட்டதாய், மூன்றவஸ்தைகளுக்குஞ் சாட்சியாய், சச்சிதானந்த சொரூபமாய் இருப்பதெதுவோ, அது ஆத்மாவாம்.

வினா:—ஸ்தூலசரீரமென்பது யாது?

விடை:—பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களாலாகியதும், கருமத்தாற்றோன்றியதும், சுகதுக்காதி போகத்திற்கிடனாயதுமாகிய பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறைதல், கெடுதல் என்னும் ஆறு விகாரங்களையுமுடைய இச்சரீரம் ஸ்தூல சரீரமாம்.

வினா:—சூக்ஷ்மசரீரமென்பது யாது?

விடை:—அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களாலாகியதும், கருமத்தாற்றோன்றியதும், சுகதுக்காதி போகத்திற

குச் சாதனமாகியதுமாய், ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, பிராணாதி ஐந்து, மனம் ஒன்று, புத்தியொன்று ஆகிய இப்பதினேழு கலைகளோடு கூடியிருப்பதெதுவோ, அது சூக்ஷ்மசரீரமாம்.

வினா:—ஞானேந்திரியங்கள் எவை ?

விடை:—சுரோத்திரம் (காது), துவக்கு (தோல்), சக்ஷு (கண்), * இரசனை (நா), கிராணம் (மூக்கு) என்னுமைந்தும் ஞானேந்திரியங்களாம்.

வினா: — ஞானேந்திரியங்களின் அதிதேவதைகள் எவை?

விடை:—சுரோத்திரியத்திற்குத் திக்கும், துவக்கிற்கு வாயுவும், சக்ஷுவிற்குச் சூரியனும், இரசனைக்கு வருணனும், கிராணத்திற்கு அசுவனிகுமாரிருவரும் தேவதைகளாம்.

வினா:—ஞானேந்திரியங்களின் விஷயங்கள் எவை ?

விடை:—சுரோத்திரத்திற்குச் சத்தத்தைக் கவர்தலும், துவக்கிற்குப் பரிசத்தைக் கவர்தலும், சக்ஷுவிற்கு உருவத்தைக் கவர்தலும், இரசனைக்கு இரசத்தைக் கவர்தலும், கிராணத்திற்குக் கந்தத்தைக் கவர்தலும் விடயங்களாம்.

வினா:—கன்மேந்திரியங்கள் எவை ?

விடை:—வாக்கு. பாணி, பாதம், பாயு, உபஸ்தமென்னுமைந்துங் கன்மேந்திரியங்களாம்.

---

* இதனையே சிங்குவை யென்றுங் கூறுவர்.

வினா:—கன்மேந்திரியங்களின் அதிதேவதைகளெவை?

விடை:—வாக்கிற்கு அக்கினியும், பாணிக்கு (கைகளுக்கு) இந்திரனும், பாதங்களுக்கு விஷ்ணுவும், பாயுவிற்கு யமனும், உபஸ்தத்திற்குப் பிரஜாபதியு (பிரமனு)ம் தேவதைகளாம்.

வினா:—கன்மேந்திரியங்களின் விஷயங்கள் எவை?

விடை:—வாக்கிற்கு வசனமும், பாணிக்குப் பண்டங்களை யேற்றலும், பாதத்திற்கு நடத்தலும், பாயுவிற்கு மல நீக்கமும், உபஸ்தத்திற்கு ஆநந்தமும் விடயங்களாம்.

வினா:—காரண சரீரமென்பது யாது?

விடை:—* அநிர்வாச்சியமாய் † அநாதியாய் அவித்யா வடிவமாய்ச் சரீர மிரண்டற்குங் காரணமாத்திரமா யிருக்குஞ் சவசொரூப அஞ்ஞானமாகிய நிருவிகற்பவடிவம் எதுவோ, அது காரணசரீரமாம்.

---

* மெய்யென்றும் பொய்யென்றுஞ் சொல்லத்தகாதது எதுவோ அது அநிர்வாச்சியமாம். மாயையைப் பொய்யென்போமாயின் பிரபஞ்சோற்பத்தி கூடாது; மாயையோ பிரபஞ்சத்தை உண்டு பண்ணுகின்றது; சத்திய மென்போமாயின் ஞானத்தாற் கெடுகின்றது; ஆகலின் மாயை அநிர்வாச்சியமாம். அங்ஙனமே, பழுதையிற் றோன்றிய பாம்பு பொய்யென்போமாயின் உண்டாகின்ற அச்சம், நடுக்கமுதலியன உண்டாகலாகா. சத்தியமெனின் விசாரத்தாற் கெடுகின்றது. ஆதலாற் பழுதையிற்பாம்பு அநிர்வாச்சியமாம். அநிர்வாச்சியம் = இஃதித் இன்னதென் றறுதியாய்ச் சொல்லத்தகாதது. அநிர்வசநீயம் என்பதும் அதுவே.

† உற்பத்தி யில்லாததாய்.

வினு:—மூன்றவஸ்தைகள் எவை?

விடை:—சாக்கிரம், சொப்பனம், சுழூத்தி யென்பவை மூன்றவஸ்தைகளாம்.

வினு:—சாக்கிராவஸ்தை யென்பது யாது?

விடை:—சுரோத்திரமுதலிய ஞானேந்திரியங்களால் சப்தமுதலிய விஷயங்கள் எக்காலத்தி லறியப்படுகின்றனவோ, அது சாக்கிராவஸ்தையாம். (அவஸ்தை - காலம் - சமயம்.)

வினு:—இவ்வவஸ்தையின் அபிமானி யாவன்?

விடை:—இவ்வவஸ்தையின் தூல சரீராபிமானியாகிய ஆத்மா விசுவனெனபபடுவன்.

வினு:—சொப்பனுவஸ்தை யென்பது யாது?

விடை:—சாக்கிராவஸ்தையில் பார்க்கப்பட்டவைகளாலும், கேடகப்பட்டவைகளாலும் உண்டாகிய வாசனையால் நித்திரைக்காலத்தில் எதில் பிரபஞ்சந் தோற்றுகின்றதோ, அது சொபபனுவஸ்தையாம்.

வினு.—இவ்வவஸ்தையின் அபிமானி யாவன்

விடை:—இவ்வவஸ்தையின் சூக்ஷ்ம சரீரபிமானியாகிய ஆதமா தைஜஸன் எனப்படுவன்.

வினு:—சுழூத்தியவஸ்தை யென்பது யாது

விடை:—யான் ஒன்றுமறியேன், நித்திரையென்னுஞ் சுகமா யநுபவிக்கப்படுகின்றது என்னும் நிலைவிற்கு ஏதுவாய அநுபவகாலம் சுழூத்தியவஸ்தையாம்.

வினா:—இவ்வவஸ்தையின் அபிமானி யாவன் ?

விடை:—இவ் வவஸ்தையின் காரண சரீராபிமானி யாகிய ஆத்மா பிராஞ்ஞன் எனப்படுவன்.

வினா:—பஞ்சகோசங்கள் எவை ?

விடை:—அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்பனவாம்.

வினா:—அன்னமயகோசம் என்பது யாது ?

விடை:—அன்ன ரசத்திலே யுண்டாய், அன்ன ரசத்தினாலே விருத்தியடைந்து, அன்னரூபப் பிருதிவியில் எது ஒடுங்குகின்றதோ, அது அன்னமயகோசமாம். அதுவே தூலசரீரமாம்.

வினா:—பிராணமயகோசம் என்பது யாது ?

விடை:— * பிராணாதியைந்து வாயுக்களும் வாக்காதி ஐந்து கன்மேந்திரியங்களும் பிராணமயகோசமாம்.

வினா:—மனோமயகோசம் என்பது யாது ?

விடை:—மனதும், ஞானேந்திரியமைந்துஞ் சேர்ந்து ஆவது எதுவோ, அது மனோமயகோசமாம்.

---

* பிராணாதி யைந்து வாயுக்களாவன:—பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்பனவாம். அவற்றுள், பிராணன்: இதயத்திலிருந்து உசுவாச நிசுவாசங்களைச் செய்யும்; அபானன்: குதத்திலிருந்துகொண்டு மலசலங்களை வெளிப்படுத்தும்; சமானன்: உந்தியிலிருந்துகொண்டு உண்ட அன்னரசங்களை நாடியின் வழியாய்ச் சரீரமுழுவதினும் செலுத்தும்; உதானன்: உண்பனவும் பருகுவனவுமாகிய அன்னரசங்களைப் பிரிக்கும்; வியானன: உடல் முழுவதினுமிருந்து உடலின் மூட்டுகளைத் திருப்பும்.

வினா:—விஞ்ஞானமயகோசம் என்பது யாது?

விடை:—புத்தியும் ஞானேந்திரிய மைந்துஞ் சேர்ந்து ஆவது எதுவோ, அது விஞ்ஞானமயகோசமாம்.

வினா:—ஆனந்தமயகோசம் என்பது யாது?

விடை:—காரண சரீரவடிவினதாகிய அவித்தையின்கணுள்ள * மலினசத்துவமான † பிரியாதி விருத்திகளோடு கூடியது ஆனந்தமயகோசமாம்.

இப் பஞ்சகோசங்கள் என் சரீரம், என் பிராணன், என் மனம், என் புத்தி, என் ஞானம் என்று தன்னாலேயே உணரப்படுகின்றன. எப்படி எனதென்னுந் தன்மையால் அறியப்பட்ட கனகம், குண்டலம், வீடு முதலியன தன்னினும் வேறாகின்றனவோ, அதுபோலப் பஞ்சகோச முதலியனவும் எனதென்னுந் தன்மையால் அறியப்படுகின்றனவாதலால் ஆன்மாவாகா.

வினா:—அங்ஙனமாயின் ஆன்மாவின் சொரூபம் யாது?

விடை:—சத்து, சித்து, ஆனந்தம் ஆத்மாவின் சொரூபமாம்.

---

* இரஜோ தமோ குணங்களால் அமிழ்த்தப்பட்ட சத்துவ குணம் மலின சத்துவகுணமாம்.

† பிரியாதி விருத்திகளாவன:—விரும்பியபொருளைக் கண்ட காலத்துண்டாகும் சுகவிருத்தி பிரியவிருத்தியாம்; விரும்பிய பொருள் கிடைத்தகாலத்துண்டாகும் சுகவிருத்தி மோதவிருத்தியாம்; விரும்பியபொருளைப் போகிக்குங்காலத்துண்டாகும் சுக விருத்தி பிரமோத விருத்தியாம்.

வினா:—சத்தென்பது யாது?

விடை:—மூன்று காலங்களினு மிருப்பது சத்தாம்.

வினா:—சித்தென்பது யாது?

விடை:—ஞானசொரூபம் சித்தாம்.

வினா:—ஆனந்தமென்பது யாது?

விடை:—சுகசொரூபம் ஆனந்தமாம்.

இவ்வாறு சச்சிதானந்த சொரூபமாகிய ஆத்மாவை (தன்னை) அறியவேண்டும்.

வினா:—இருபத்துநான்கு தத்துவோற்பத்தியின் கிரமம் யாது?

விடை:—பிரமத்தை ஆசிரயித்ததும், சத்துவ ரஜோ தமோகுண வடிவினதுமாகிய மாயையுளது. அதினின்றும் ஆகாயமும், ஆகாயத்தினின்று வாயுவும், வாயுவினின்று தேயுவும், தேயுவினின்று அப்புவும், அப்புவினின்று பிருதிவியும் உண்டாயின. இவ்வைந்து தத்துவங்களுள் ஆகாயத்தின் சாத்துவிகாமிசத்தினின்று சுரோத்திரேந்திரியமும், வாயுவின் சாத்துவிகாமிசத்தினின்று துவக்கிந்திரியமும், அக்கினியின் சாத்துவிகாமிசத்தினின்று சக்ஷுவிந்திரியமும், ஜலத்தின் சாத்துவிகாமிசத்தினின்று இரசனேந்திரியமும், பிருதிவியின் சாத்துவிகாமிசத்தினின்று கிராணேந்திரியமும் உண்டாயின. இவ்வைந்து தத்துவங்களின் * சமஷ்டி சாத்துவிகாமிசத்தினின்று மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அந்தக்கரணங்கள் உண்டாயின. சங்கற்ப விகற்பவடிவினது மனம்; நிச்சயவடிவினது புத்தி;

---

* சமஷ்டி - சேர்க்கை.

யான் என்பதைச் செய்வது அகங்காரம்; சிந்தனையைச் செய்வது சித்தம். இவற்றுள் மனதிற்குச் சந்திரனும், புத்திக்குப் பிரமனும், அகங்காரத்திற்கு உருத்திரனும், சித்தத்திற்கு வாசுதேவனும் தேவதைகளாம்.

இவ்வைந்து தத்துவங்களுள் ஆகாயத்தின் இராசதாம்சத்தினின்று வாக்கிந்திரியமும், வாயுவின் இராசதாம்சத்தினின்று பாணீந்திரியமும், அக்கினியின் இராசதாம்சத்தினின்று பாதேந்திரியமும், ஜலத்தின் இராசதாம்சத்தினின்று உபஸ்தேந்திரியமும், பிருதிவியின் இராசதாம்சத்தினின்று குதேந்திரியமும் உண்டாயின. இவற்றின் சமஷ்டி இராசதாம்சத்தினின்று பஞ்சப்பிராணனுண்டாயின. இவ்வைந்து தத்துவங்களின் தாமதாம்சத்தினின்று பஞ்சீகிருத பஞ்சதத்துவங்கள் உண்டாயின. இஃது இருபத்துநான்கு தத்துவோற்பத்திக் கிரமமாம்.

வினா.— *பஞ்சீகரணம் எங்ஙனம்?

விடை:— இப்பஞ்ச மகாபூதங்களின் தாமசாம்சசொரூபமாகிய ஒவ்வொரு பூதத்தையும் இவ்விரண்டாகப் பிரித்து, அவற்றின் ஒவ்வொரு பாதியை வேறே சும்மாவிருத்தி, மற்ற ஒவ்வொரு பாதியையும் நந்நான்காகப் பிரித்து, தமது பாதிகளின் வேறாகிய பாதிகளில் தம் பாகங்கள் நான்கையும் சேர்க்க, அப்பொழுது †பஞ்சீகரணம் ஆகின்றது. இப்பஞ்சீ

* பஞ்சீகரணம் - ஐவைந்தாக்கல்.

† இப்பஞ்சீகரணத்தை ஸ்ரீ விசாரசந்திரோதயம் என்னும் நூலில் விரிவாய்க் காணலாம்.

கிருத பஞ்சமகா பூதங்களினின்றும் ஸ்தூலசரீரம் உண்டாகின்றது. இவ்வாறாகப் பிண்ட பிரமாண்டங்களுக்கு ஐக்கியமுண்டாயிற்று.

வினா:—ஜீவனென்பது யாது? ஈசுவரன் யாவன்?

விடை:—ஸ்தூல சரீராபிமானியாய் ஜீவனென்னும் பெயருடையதாய்ப் பிரமத்தின் பிரதிபிம்பமுண்டாகின்றது. அச்சீவனே பிரகிருதியினால் ஈசுவரனைத் தன்னினின்று வேறாக அறிகின்றது. அவித்தையாகிய உபாதியுடையதாய் ஆத்மா ஜீவனெனப்படுகின்றது. மாயோபாதியுடையதாய் ஈசுவரன் எனப்படுகின்றது. இவ்வாறு உபாதி பேதத்தால் ஜீவேசுவர பேதத்திருஷ்டி எதுவரையிலுமிருக்கின்றதோ, அதுவரையிலும் ஜனன மரண முதலிய வடிவினதாகிய சமசாரம் நீங்குகிறதில்லை. அக்காரணத்தால் ஜீவேசுவரர்களின் பேதபுத்தி (ஜீவன் வேறு, ஈசுவரன் வேறு என்னும் ஞானம்) அங்கீகரிக்கத் தக்கதன்று.

வினா.—அப்படியானால் அகங்காரத்தோடு கூடிய கிஞ்சிஞ்ஞனாகிய ஜீவனுக்கும், அகங்காரமில்லாதவனும் சருவஞ்ஞனுமாகிய ஈசுவரனுக்கும் தத்துவமசியென்னும் மகா வாக்கியத்தால் எப்படி அபேதஞானம் உண்டாகும்? இருவரிடத்தும் விரோத தருமம் காணப்படுதலால்.

விடை:—அங்ஙனம் அன்று; ஸ்தூல சூக்ஷ்ம சரீராபிமானி த்வம்பத வாச்சியார்த்தமாம்; உபாதியினின்று விடுபட்டதும் சமாதிதசையை யடைந்ததுமாகிய சுத்தசைதன்யம் த்வம்பத லக்ஷியார்த்தமாம். இப்படியே சர்வஞ்ஞத்துவ

முதலியவற்றோடு கூடிய ஈசுவரன் தற்பத வாச்சியார்த்த மும், உபாதியின்றிய சுத்தசைதன்னியம் தற்பத லக்ஷி யார்த்தமுமாம். ஆகவே ஜீவேசுவரர்களுக்குச் சைதன்னிய வடிவமாக அபேதங் கூறுதலில் பாதகமின்று. இவ்வாற் றன் வேதாந்த வாக்கியங்களாலும் சற்குரு உபதேசத்தா லும் எல்லாப் பூதங்களிடத்தும் எவர்களுக்குப் பிரமபுத்தி (சுத்த சச்சிதானந்த பிரமம் நான் என்னும் நிச்சயம்) உண்டாகின்றதோ, அவர்களே ஜீவன்முக்தர்கள் எனப் பொருளாகின்றது.

வினா:—ஜீவன்முக்தன் என்பவன் யாவன்?

விடை:—தேகம் யான், புருஷன் யான், பிராமணன் யான், சூத்திரன் யான் என்னும் திடநிச்சயத்தைப்போல, யான் பிராமணன் அல்லன், யான் சூத்திரனல்லன், யான் புருஷனல்லன், யான் அசங்க சச்சிதானந்த சொப்பிரகாச சருவாந்தரியாமியாகிய சிதாகாசசொரூபன் என்னும் திட நிசசய வடிவினதாகிய அபரோக்ஷ ஞானமுடையவன் ஜீவன்முக்தன் எனப்படுவன். பிரமமே யானென்னும் அப ரோக்ஷ ஞானத்தால் சகல கருமபந்தங்களினின்றும் விடு பட்டவனுகின்றான்.

வினா:—கருமங்கள் எத்தனை வகையாம்?

விடை:—ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்னும் பேதத்தால மூவகையாம்.

வினா:—ஆகாமியம் என்பது யாது?

விடை:—வர்த்தமான தேகத்திற் செய்யப்படும் புண் ணிய பாவமாகிய கருமம் எதுவோ, அது ஆகாமியம் எனப் படும்.

வினா:—சஞ்சிதம் என்பது யாது?

விடை:—அனந்தகோடி ஜன்மங்களுக்குக் காரணவடிவமாய் முன்னமே சம்பாதிக்கப்பட்டுள்ள கருமக்கூட்டம் எதுவோ, அது சஞ்சிதம் என அறியத்தக்கது.

வினா:—பிராரத்தகருமம் என்பது யாது ?

விடை:—இச்சரீரத்தை யுண்டுபண்ணி இவ்வுலகத்தில் இவ்வாறு சுகதுக்காதிகளைத் தரும் கருமம் எதுவோ, அது பிராரத்தமாம்.

வினா:—பிராரத்தகர்மம் எதனுல் நசிக்கும் ?

விடை:—'பிராரத்த கருமநாசம் போகத்தினுலேயே யுண்டாம்' என்பதனுன் பிராரத்தகர்மம் போகத்தினுல் நஷ்டமாம்.

வினா:—அப்படியானுல் சஞ்சிதகருமம் எதனுல், நசிக்கும்?

விடை:—சஞ்சிதகருமம் பிரமமே நான் என்னும் நிச்சயவடிவினதாகிய ஞானத்தாற் கெடும்.

வினா:—ஆகாமியகருமம் எதனுற் கெடும்?

விடை:—ஆகாமியகருமமும் ஞானத்தாற் கெடும், தாமரையிலையிற் றண்ணீர்போல் ஆகாமியகருமத்திற்கும், ஞானிக்கும் சம்பந்தமில்லை.

வினா:—அப்படியானுல் அவர்களாற் செய்யப்படும் புண்ணிய பாவங்களுக்குக் கதி யாது?

விடை:— * ஞானியை எவர்கள் துதித்துப் பூஜித்தருச்சிக்கின்றார்களோ, அவர்களே அவன் செய்த ஆகாமிய புண்ணியமும், எவர்கள் நிந்தித்துத் துவேஷித்துத் துக்கத்தைத் தருகின்றார்களோ, அவர்களே அவன் செய்த ஆகாமிய பாவமும் அடைகின்றன.

இவ்வாறு ஆத்மாவையுணர்ந்தவன் "ஆத்மஞானியானவன் சோகத்தைக் கடக்கின்றான்" என்னுஞ் சுருதியினாலும், "காசியிலேனும் சண்டாளனுடைய வீட்டிலேனும் சரீரத்தை விடுக; பற்றொழிந்த இவன் ஞானங் கிடைத்த காலத்தில் முக்தனாகின்றான்" என்னும் ஸ்மிருதியினாலும் சம்சாரத்தைக் கடந்து பிரமானந்தத்தை இகத்திலேயே யடைகின்றான்.

ஸ்ரீ தத்துவபோதம்

முற்றிற்று.

---

* 'இதஞ் செய்வோர் புண்ணியங்களையும், துவேஷிப்போர் பாவங்களையும் கொள்ளுகின்றார்கள்' என்பது சுருதி.

| | அ | ப. |
|---|---|---|
| தேவாரதிருவாசகத்திரட்டு | 8 | 0 |
| சிவநாமாவளித் திரட்டு ... | 3 | 0 |
| சிவாநந்த மாலை ... | 4 | 0 |
| ஸ்ரீ தத்துவபோதம் ... | 1 | 0 |
| நாஞ்ஜீவவாதக்கட்டளை | 1 | 0 |
| செடி (செய்யுள்) ... | 1 | 0 |
| கட்டளைப்பிரபந்தம் (14 கட்டளைகள்) ... | 8 | 0 |
| சைவ சித்தாந்த வரலாறு | 4 | 0 |
| சித்தாந்தப் பிரகாசிகை ... | 2 | 0 |
| பஞ்சீகரண வேதாந்த சித்தாந்தம் ... | 2 | 0 |
| சித்தாந்த தத்துவலக்ஷணம் | 0 | 9 |
| பஞ்சாக்ஷரப் பதிபசுபாசம் | 1 | 6 |
| ஞானத்தின் பிரிவுகள் ... | 2 | 0 |
| ஓங்காரத்தின் மகத்துவம் | 1 | 0 |
| அஷ்டாக்ஷர மகத்துவம் | 1 | 0 |
| ஏகாந்த சேவை ... | 1 | 0 |
| கலியுக தர்மம் ... | 1 | 6 |
| ஆரியர் சந்தியாவந்தனம் | 1 | 0 |
| பாரத நீதி ... | 2 | 0 |
| திருமங்கல்யதாரணவிதி | 0 | 6 |
| பிள்ளைத் தாலாட்டு ... | 0 | 6 |
| ஜாதிபேத விளக்கம் ... | 2 | 0 |
| விஷப்பிரதி விஷத்திரட்டு | 2 | 0 |
| தன்வந்திரி நாடிசிந்தாமணி | 2 | 0 |
| இராஜயோக வித்யா வினாவிடை ... | 1 | 0 |
| சிவநாமாத்விதக் கீர்த்தனை | 8 | 0 |
| சீதாராமத் தாலாட்டு ... | 1 | 0 |
| யாப்பிலக்கண வினாவிடை | 4 | 0 |
| அணியிலக்கண வசனம் | 4 | 0 |
| வச்சணந்திமாலை உரை ... | 2 | 0 |

| | அ | ப. |
|---|---|---|
| 108 திருப்பதித் திருப்புகழ் | 8 | 0 |
| அஷ்டப்பிரபந்த மூலம் | 12 | 0 |
| நைடத மூலம் ... | 12 | 0 |
| குசேலோபாக்யான மூலம் | 8 | 0 |
| நன்னூல் மூலம் ... | 2 | 0 |
| ஔவைகுறள் மூலம் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத மூலம் | 3 | 0 |
| வேதாந்தசூளாமணி மூலம் | 3 | 0 |
| மீனாக்ஷியம்மன் பிள்ளைத் தமிழ் மூலம் ... | 3 | 0 |
| சிவசிவவெண்பா முதலிய | 8 | 0 |
| சீகாளத்திக் கலம்பகம் ... | 2 | 0 |
| ஸ்ரீ வைஷ்ணவ சமயதீபம் | 0 | 9 |
| ஸ்ரீ விநாயக சிவசத்தி கவசம் | 1 | 0 |
| பக்தி (இன்னதென்பது) | 2 | 0 |
| ஒருதுறைக் கோவை ... | 4 | 0 |
| குடாரம்: (குறள் விஷயம்) | 1 | 0 |
| அம்மணீயம ஐயாசாமீயம் | 8 | 0 |
| விவேக சிந்தாமணி உரை: | | |
| 1ம் பாகம் ... | 8 | 0 |
| 2ம் பாகம் ... | 8 | 0 |
| பஞ்சதந்திர வசனம் ... | 10 | 0 |
| ஆதிசூடி, கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை விருத்தியுரை ... | 12 | 0 |
| துவைதசைவ கண்டனம்: | ரூ. | அ |
| 1ம் பாகம் ... | 3 | 0 |
| 2ம் பாகம் ... | 2 | 0 |
| நளவெண்பா உரை ... | 1 | 8 |
| தண்டியலங்காரம் உரை | 1 | 12 |
| ஆத்திசூடிப்புராணம் உரை | 2 | 0 |
| பிங்கல நிகண்டு உரை ... | 2 | 8 |
| பழமொழி அகராதி ... | 2 | 0 |

| | அ. | ப. |
|---|---|---|
| ஆத்திசூடி உரை ... | 0 | 9 |
| கொன்றைவேந்தன் உரை | 1 | 0 |
| வெற்றிவேற்கை உரை .. | 1 | 0 |
| வாக்குண்டாம் உரை ... | 1 | 3 |
| நல்வழி உரை ... | 1 | 6 |
| நன்னெறி உரை ... | 1 | 6 |
| ஷை நீதிநூற்கொத்துஉரை | 8 | 0 |
| ஷை 6 நூலின் மூலமும், நீதிநெறிவிளக்க மூலமும், அவற்றின் இங்கிலீஷ் மொழிபெயர்ப்பும் அடங்கிய நீதிநூற்றிரட்டு ... | 8 | 0 |
| அறப்பளீசுர சதகம் ... | 3 | 0 |
| குமரேச சதகம் ... | 3 | 0 |
| திருவேங்கட சதகம் ... | 3 | 0 |
| தண்டலையார் சதகம் ... | 2 | 0 |
| கோவிந்த சதகம் ... | 0 | 9 |
| எம்பிரான் சதகம் ... | 1 | 0 |
| சிவசங்கர சதகம் ... | 0 | 9 |
| ஷை 7 சதகமும் அடங்கிய சதகத்திரட்டு 1-ம் பாகம் | 12 | 0 |
| கைலாசநாதர் சதகம் ... | 2 | 0 |
| ஜெயங்கொண்டார் சதகம் | 2 | 0 |
| குருநாத சதகம் ... | 1 | 0 |
| அவையாம்பிகை சதகம் ... | 2 | 0 |
| அருணாசல சதகம் ... | 1 | 0 |
| அண்ணாமலைச் சதகம் ... | 2 | 0 |
| வடவேங்கடநாராயண சதகம் | 2 | 0 |
| தொண்டைமண்டல சதகம் | 2 | 0 |
| கோகுல சதகம் ... | 2 | 0 |
| திருத்தொண்டர் சதகம்... | 2 | 0 |
| ஷை 10 சதகமும் அடங்கிய சதகத்திரட்டு 2-ம் பாகம் 1 ரூபா | | |

| | அ. | ப. |
|---|---|---|
| ஏசுவை நம்பினால் ரக்ஷிப்படையலாமா? ... | 0 | 6 |
| கிறிஸ்தவர் விடை மறுப்பு | 4 | 0 |
| விவிலிய குற்சிதம் ... | 2 | 0 |
| ஷை திக்கார கண்டனம்... | 2 | 0 |
| சிவநாம விளக்கம் ... | 1 | 6 |
| ஏசுமனிதனே, கடவுளா? | 2 | 0 |
| விகாரஹாராதன முதலியன | 1 | 0 |
| பைபில் யார எழுதியது? | 1 | 0 |
| சிவனுந் தேவனா என்னும் தீய நாவுக்கு ஆப்பு ... | 1 | 0 |
| கிறிஸ்தவர் ஞானோதய ஆபாச விளக்கம ... | 0 | 6 |
| புரொடெஸ்டாண்டு கிறிஸ்து மத கண்டனம் ... | 0 | 9 |
| வஜ்ஜிரடங்கம் ... | 1 | 0 |
| கிறிஸ்துமதத் திரியேகத்துவ ஆபாசம் ... | 0 | 6 |
| இந்துஜெய பேரிகை: 4 பாகமும்... ... | 3 | 9 |
| பைபிலும் உலக சிருஷ்டியின் ஆபாசமும் ... | 0 | 9 |
| கிறிஸ்துமதத்தின் குருட்டு நம்பிக்கை ... | 0 | 3 |
| பாதிரிமார் ஸ்கூலில் பெண்கள் படிக்கலாமா? .. | 0 | 3 |
| ஆரியப்பெண்களுக்குக் கல்வி கற்பிக்கும் முறைமை... | 0 | 6 |
| ஷை 18 நூலும் சேர்ந்தது ரூபா 1½ | | |
| சைவதூஷண பரிகாரம் | 4 | 0 |
| பிரசங்கபீடிகை, கிறிஸ்து மத கண்டன வஜ்ஜிர குடாரம் ... ... | 1 | 6 |

# குடாரம்.

திருவள்ளுவர் குறளையும் பரிமேலழக ருரையையும்
பற்றிச் சிலர் மயங்கிக் கூறியவழுக்
களை குடாரம்.

இது
தலைத்தமிழ்ச்சங்க வியற்றமிழாசிரியராகிய
வி. இராமாநுச கவிராயரவர்களால்
இயற்றப்பட்டு,

சென்னை:
மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1909.

விலை அணா 1.

# குடாரம்.

திருவள்ளுவர் குறளையும் பரிமேலழக ருரையையும்பற்றிச்
சிலர் மயங்கிக் கூறிய வழூஉக்களை குடாரம்.

*இதன் பொருள்: சென்னைமாநகர்வயின் இலக்கணக் கவிஞரிற்
சிலர் மருண்டு சொல்லிய குற்றங்களாகிய காடுகளைக் களை
கோடாலி என்பது. இஃதேகதேச வுருவக வணியாய
நூற்குப் பெயராயிற்று.*

இது
தலைத்தமிழ்ச்சங்க வியற்றமிழாசிரியராகிய
**வி. இராமாநுச கவிராயரவர்களால்**
இயற்றப்பட்டு,

சென்னை:
மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

**1909.**

விலை அணா 1.

உரைப்பாயிரத்துள், "வாழ்த்துக் கூறலெனவும், வழுத்துந் தண்டமெனவும் வல்லொற்று மிகுத்துவருதல் கூடாது" எனற்குக் கண்டனம்.

க. இது வன்றொடர்மொழிக் குற்றுகரச் சொன்னின்று வல்லெழுத்து முதன்மொழியொடு புணர்ந்ததாகலி னிதற்கு ஆசிரியர் தொல்காப்பியனார், "வல்லொற்றுத் தொடர்மொழி வல்லெழுத்து மிகுமே" என வல்வழிக்கும், "வன்றொடர் மொழியு மென்றொடர் மொழியும், வந்த வல்லெழுத் தொற் றிடை மிகுமே" என வேற்றுமைக்குங் கூறினார். இஃதுணர்ந்த பவணந்தி முதலியோரும் "வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி" எனவும், "இடைத்தொட ராய்தத் தொடரொற் றிடையின், மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை" எனவுங் கூறியவற்றுள், வன்றொடர்க் கிருவழியும் வல்லொற்று மிகுமெனல் காண்க.

உதாரணம்:—வழக்குந் தண்டம், சுக்குந் திப்பிலி அரைப்புச் சிக்காய், குணக்குக் குடக்கு, பாக்குப் புகையிலை, கொக்குக் கடிது, குரக்குக்கடிது, பாக்குக்கடிது எனவும், வழக்குத் தீர்ப்பு, வாழ்த்துங் கூறினார், சுக்குக் கொடுத்தான், அரைப்புத் தந்தான், கிழக்குக்கொல்லை, பாக்குக் கடை, கொக்குக் கால், குரக்குக் கால் எனவும் வரும். இங்ஙனம் வல்லொற்று மிகாவேல், கீரை கறி, வாழை பழம் என்பன போலப் புணர்ச்சியின்றி விட்டிசைபோன்று வருதற் பாலன வாமெனக் காண்க.

உரைப்பாயிரத்துள், "பதினெட்டுப் பதத்ததெனல் வேண்டும், பதினெட்டுப் பதார்த்தத்ததென்பது கூடாது" எனற்குக் கண்டனம்.

உ. பதமே, மொழி வழியிடங் குறிமுதலன கொளினு உம், பொருள பெறல் வேண்டுமாற் புகல் பதார்த்தத்தது,

வழக்கென வினைமுதன் மாட்டுதன் மரபு எனக் காண்க. என்னெனின், வழக்கானது பதினெட்டுப் பதத்ததெனின், அதற்குப பதினெட்டுச் சொல்லை யுடையது: ப - வழி - து, ப-இட-து, ப-கு-து எனப பொருள்படும். அங்ஙனம் படினும் பதினெட்டுச சொற்பொருளையுடையது: ப-வ-பொ-து, ப - இட - பொ - து, ப - கு - பொ - து எனப் பொருள் பெயர்த்துரைக் கன்றி நிரம்பாமையா னென்க. பதமென்ப தீண்டுத் தொடர்பு தோன்ற நின்றது. இவற்றுட் கடன் கோட லென்பதோர் பதமெனவும் அதனுட் பொருளமைந்து கிடத்தலாற் பதார்த்த மெனவுங் காண்க. பதார்த்த மென்பது வடநான் மொழியாய்த் தமிழினுளளே பண்ட பதார்த்தம், கறிபதார்த்தம, நானொரு பதார்த்தத்தை விரும்பி யிருக்கிறேன் எனப பெரும்பாலும் பொருளை குறித்தும், சிறுபான்மை விடயங்களைக குறித்தும் வழங்கி வருதல் காண்க. இனிப் பொருளகளையும், விடயங்களையும் பதமென வழங்குவது வடநால் வழக்கன்றித தமிழ் வழக்கன்று. என்னை? “எழுத்தே தனித்தும தொடாந்தும் பொருடரிற், பதமா மதுபகாப பதம்பகு பதமென, விருபா லாகி யியலு மென்ப,” பதவியல், பதவுரை, பதப்பொருள என்பவாகலிற் பதமென்ற துணையானே சொல்லென்றே பொருள்படு மாதலால் அதனை விலக்குதற் பொருட்டுப் பதார்த்தமென்றே வழங்கி வருவது தமிழ் வழக்கெனக் காண்க. இங்ஙனமன்றிப பொருள்களையும் விடயங்களையும் பதமெனக் கூறின் அதுவே மரபு வழுவெனக் காண்க. இன்னும் இது கூடாதென விலக்யோர் காட்டிய நியாயநூல் விடயமென்றதே மிக்க சான்றாயிற்று; அவர் இதை யறநூலென்றே வெளிப்பட்டு நிற்றலின். என்னை? “சாற்று மநுபந்த சதுட்டய நூற்கு விடயம் சம்பந்தம் பயனதிகாரிகளென நான்கறியே” “விடயமது சிவ சீவர் தமதேகத்துவமாம்” என்பவாகலின் விடய

மென்பது நாற்பொருளை யாகலான், அறம்பொரு ளின்ப
மும் வீடு நிமித்தமாக, திறம்பெற வுரைத்த வித் திருவள்
ளுவருள்ளும், புரையாவிடைய மொன்றுளதெனிற் சான்றோர்,
புரைதீர் மொழியெலாம் பொய்படுமொன்றோ, வித் தமிழ்
வேதமென் றிட்டதெற் றெற்றே, பிழைத்தது மரபெனப்
பேசலெற் றெற்றே, தழைந்ததரும் மரபொடு தமிழ் மாண்
டோரே.

இன்னும், "தேஷாமாத்யம் ருணாதாநம்" என்றெழுத்து
ப்பிழையாக வெழுதிககாட்டிய மநுவசனத்திற் சொல்
லப்பட்ட பதமென்பது, அதற்குரிய பெயரன்றென்பது
தோன்ற விவகார விடயமென்றன்றோ வுரை செயப்பட்டிருக்
கின்றது? பதமென்றதற்குப் பொருள் விடயமன்று; அது
வலிந்து கோடலாய்ச் சொல்லப்பட்டதன்றி எந்த நிகண்
டிலுமில்லை. இன்னும் நாரதர், "ஸ்ம்ருதியோமஃ வபிஜ்ஞேயஃ
ஸஹஸ்ராகசாகியோமதஃ" எனவும், "ஏஷாமேவ ப்ரபே
தோந்ய ஶதமஷ்டோத்தரம் ஸ்ம்ருதம்" எனவுங் கூறிய வசனங்
களிலே விவகார மிரண்டுவகையாய்ப் பிரிக்கப்பட்டதென்
றார், அதுதானே நூற்றெட்டு வகையாய்ப் பேதப்பட்டிருக்
கின்றதென்றுஞ் சொல்லியிருக்கின்றது. இவ்வாறே மேற்
சொல்லிய மநுவசனத்திற் குரைசெய்த விஞ்ஞானேசுவரரும்
"வ்யவஹாராஷ்டாதஶஸ்ம்ருதே" என்று பீடிகை போட்
டுக்கொண்டு மறுத்தலென்னு மதம்பற்றி விவகாரம் பதி
னெட்டு வகையாய்ப் பேதப்பட்டிருக்கின்றதென்றார்; பத
மென்றெடுக்கவேயில்லை. இப்படியிருக்கின்ற வடநூல் வழக்
கையுந் தமிழ் வழக்கையு நோக்கி யுரைசெயப்புகுந்த பரிமே
லழகர் இவ்விரண்டினுக்கும் பொருந்தப் பதார்த்தமென் று
ரைத்த துணராது மிதந்த கருத்தானே யது கூடாது, என்

றின் பெயரை யொன்றிற் கிட்டு வழங்குவது மரபுவழு வென்றனர். அங்ஙன மரபு வழுவென்றோ மறுவுடனே தான் சொல்லவேண்டிற்று; மற்று விவகார விடயத்துக்குப் பத மென்று பெயரிட்டாரென்றும், அதுவே பற்றுநூலிலே வழங் கிற்றென்றும், ஆராயாதுரைத்தமையின். என்னை? நியாய சாத்திரத்திற் கௌதம சூத்திரத்திலே, சத்தம் பதமென்று சொல்லுக்குப் பெயரிட்டிருக்கின்றது. வியாகரணத்திலே, சுப்திஙந்தம பதமென்று மிருக்கின்றது. வேதாந்த சாத்திரத் திலே சத்துவ முதலிய மூன்றிற்கு மிடப்பட்ட குணமென் பதை நியாய சாத்திரத்திலே உருவ முதலிய விருபத்து நான்கிற்கு மிட்டிருக்கின்றது. ஷை-ல் ஆகாமிய முதலிய மூன்றிற்கு மிடப்பட்ட கருமமென்பதை எடுத்தன் முதலிய வைந்து கிரியைகளுக்கு மிடப்பட்டன; ஆனதினாலே திரவி யம் குணம் முதலிய வேழுக்கு மிடப்பட்ட பதார்த்தமென் பதை, விவகார விடயத்துக்கிடக்கூடாதென்பது அவர் மரபு நோக்கி யன்றி மற்றெம்மரபு நோக்கியும் வழுவாகாதெனை வுய்த்துணர்க.

**உரைப்பாயிரத்துள், "நின்றவவ்வவற்றிற் கெனல்வேண்டும் நின்ற வற்றிற்கென்பது கூடாது" என்றதற்குக் கண்டனம்.**

௧. அந்தணர் முதலிய வருணத் தார்தாம், பிரம சரிய முதலிய நிலைகளி, னின்றெனப் பயனிலை கொண்டதோர் தொடர்பி, னிடைத்தரத் தமக்கு விதிக்கப் பட்டவென்றிடைப் பிற வரலுழைத் தத்தமக்கென்ற, வடுக்கினிற் பயனுடைத் தவர்பல ராதலிற், பிரம சரிய முதலிய நால்வகை, நிலைகளி னின்றவ வவற்றிற் கோதிய, வெனப்பன்மைச் சுட்டுக்கேற் றுவா கொல்லோ, வரிமேலழகுறூஉ மன்பமை யந்தணர், பரி மேலழகர் தாம் பழிப்பரி மேற்கொள்வோ, ரன்றியம் மீதென் னெனி னறைதரு நால்வகை, நிலைகளி னின்றெனக் கொண்ட

பின் படுக்கிர், சுட்டியர் வேண்டி னஃதாற் செய்ரோ, சுட்டாது பன்மைச் சுட்டடுக்கி வரலா, லாதலி னவற்றாற் கோதிய வென்ன, வடுக்காது சுட்டலே யடுக்குமென் றுரைக்க.

உரைப்பாயிரத்துள், "பயந்தவாயேனல் வேண்டும் பயந்த வென்பது கூடாது' எனற்குக் கண்டனம்.

௪. வழக்குந் தண்டமும், பாத்தவெனவே பயனிலை முற்றிற், றாகடமன்று முடிந்தது முடிந்தது, வாய தூஉம் பன்மை யாக வேண்டுதற்க், கல்லதூஉம் பன்மை யல்லதூஉம் பன்மை, அதான்று, ஆயதென்றது பழித்தாயெனக்கொண்டது, தாய வட்டாலுமென் செய்யுளைத்தோமெனுக, கொண்டதுபோலு மென் வண்டமிழ்ப் புலவீர்.

கடவுள்வாழ்த்து ஒன்பதாவது குறளுரையில், "இனி இந்த நான்கு முடையதாயேனல் வேண்டும், உடைத்தாயேனல் கூடாது" எனற்குக் கண்டனம்.

௫. இனி, எண் குணங்களாவன:—இறைவன் இந்த நான்கு முடைத்தாயிருப்பதும், இந்த நான்கு மில்லாதிருப்பதும் எனவும், அட்டசித்திகளெனவுஞ் சொல்வாரு முண்டு, என்றமேதோர் தொடர்மிடை யெழுவாய் பயனிலை, யிஃதெனை வுணர்ந்தில ரிஃதெனோ மொழிந்தனர்.

அதனுளாறவது குறளுரையில், "இச்சைகளுமைந்தாயினவேனல் வேண்டும் இச்சைகளு மைந்தாயிற்றெனல் கூடாது" எனற்குக் கண்டனம்.

௬. "ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையு, மோரிடம் பிறவிடந் தழுவலு முளவே" என்னு மிலக்கண முணராதார் "இருநோக் கிவளுண்க ணுள்ளது" என்பதனை யும், "உள்ளிய தெல்லாம்" என்பதனையும், "தந்தை செழி

யா" என்பதனையும், "இளையர்தாய்" என்பதனையும், ஔவை கூறிய "இளநெருங்கு" என்பதனை "வளர்நெருங்கு" எனவும், "சினத்தைப்பேணின்" என்பதனை "சிவத்தைப்பேணின்" எனவுந் திருத்தியதுபோலத் திருத்தல்வேண்டுமென் றுரைத்துவ ரன்றியும், பால்வழுவமைதியும் பால்வழு விவர்க்கே.

உரைப்பாயிரத்துள், "கடவுள்வாழ்த்துக் கூறுகின்றாரெனல் வேண்டும்; முதற்கடவுள் வாழ்த்துக் கூறுகின்றாரெனல் கூடாது" என்றற்குக் கண்டனம்.

எ. இனி, முதற் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார். கடவுள் வாழ்த்தாவது எனப்படூஉ முதற்றனி நின்றதை, முன்னொன்னவனையார்க மென்னினியுரைப்பாம், அவர் குன்றக் கூறலென்றாக்கி னென்செய்வாய!

உரைப்பாயிரத்துள், "சாத்துவிகமெனல் வேண்டும் சாத்துவிதமெனல் கூடாது" என்றதற்குக் கண்டனம்.

அ. நிலையினிழிந்ததோர் நீர்மையர் தம்முறை, புலவின் முன்னீர்மை யாய்க்குறுநர்தஞ் சீர்போற், சாத்துவிதமெனுந் தமிழ்மொழி தன்னுழைச், சாத்துவிகமெனச் சாற்றுமன் மொழியிய, விலக்கையென்றுய்த்தரல் சொல்லியாங்காற்றுதும். என்னை? கிருஷ்ணன் - கண்ணன், காவியம் - காப்பியம், பர்வதம் - பருப்பதம், மரதகம் - மரகதம், கோகநதம் - கோகநகம், சாத்துவிகம் - சாத்துவிதம், சாததிகம், மசாநம் - மயாநம் எனப் பல்லாற்றானுந் திரிந்துஞ் சிதைந்துஞ் சான்றோரிலக்கியங்களுட் பயின்று வருவன நோக்கி, ஆசிரியர் தொல்காப்பியனார் "வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ, யெழுத்தொடு புணர்ந்தசொல்லாகுமே" எனவும், "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" எனவு மிலக்கணங் கூறுதல் காண்க. இனி பர் சாத்துவித மென்பது கூடாதெனற் குதாரணமாகக்

காட்டிய வேதாந்த சூளாமணியில், "சத்துவகுணத்திற் றோன்றும்" என்ற பதினாறாவது செய்யுளின் பின்னின்ற நாற்பதாவது செய்யுளில், "அருந்தால சரீரத்திற் சாத்துவிதகுணத்தோடு" என்றிருக்கின்றது; அதனையுமிவர் நுண்மாணுழை புல நுழைந்தின்று கொல்லோவென வுலகங் கூறுதற்கு உட்கிலர்க்கு, முக்குணத்தின் பெயர் "முக்குணஞ் சாத்துவித மிராசதந் தாமதம், சாத்துவிககுணந் தொழிலின்பெயர்" என்கின்ற திவாகரப் பயிற்சியும், "ஏற்ற சாத்துவிகதமோடே யிராசததாமதங்கள்" என்கின்ற நிகண்டுப் பயிற்சியும் இல்லாயி னென்செய்வ ரிவர்தாம புணர்த்துநி, னிலைநீருடைப் புவிக்கலாகூர் வெழூஉச்சொல், லன்றி யாண்டைய வாமிலக்கணச்சொல், லொவாறிய சான்றோ ருரைத்த நூலவ்வே.

அரனுமே, "கடவுளெனல் வேண்டும், கடவுளெனல் கூடாது" என்றதன் கண்டனம்.

௩. விளம்பிய கடவுளை மூவரும் விசேடித்து, வளம்பெற நின்றுழி மயலறக்கேண்மின், மெய்ம்மைத்த சீர்மையவ் விரிஞ்சனை நேர்தரூஉந், தெய்வப்புலமைத் திருவள்ளுவனு, ரோதியகுறட் குரையொன்பதிற் சிறந்திடக், கருத்துப் பதப் பொருள் காட்டி விளைவிடை, பொருந்தி யைந்தியலுடன் பொருள விரித்துரைப்பத், தொடங்கிய ஞான்றிவ ரடங்கனில் புலவர்தா, மம்மூவரையு மென் றியாங்ஙனஞ் சுட்டுவர், மும்மாண்பிலாது முற்றுமைமையும் விதந்தே, அதான்று, உறுதிப் பொருட் குரை யுணராமையினன், முதற்கடவுளரோர் மூவரென் றுணர்ந்தில, ரறம்பொருளின்பமு மாதன்முக் குணத்தா, னாதலின் முப்பொருள் கூறலுற்றார்க்கும், மூவரைவாழ்த்துதன் முறைமையிவ் வாழ்த்தும், மூவர்க்கும் பொதுப்படக் கூறினரென்றனா, ராக்கவினைக்கு வினைமுதல் வேண்டுமென், றேககறறு வென்செய்து மூலப்பகுதியே, வீடுமுன் விலக்கினர்

விதியுழியரனென், முதலெழுத் தெனல் போன் முதற்கடவு ளரே, யிதுகருத தின்றி யியன்ற பிழைபெனற், குடாரம் பவரால் மொழிந்ததமை யன்றியு, மூலவினுரையும் பெறூஉ முதவி சோறலினே.

அதனுள், "முந்நியெனல் வேண்டும், போக்கமென்பது கூடாது" எனற்தக் கண்டனம்.

௧0. நீமிரைந்து மோக்கமென்பது, நிடேசர் நிகண் டெனும் பெற்றியோர்க ளனரெனின், மோக்கமென் பத நிலே முனிவரோ முனியார்.

அதனுள், "உறுதி நன்மை யன்று" எனற்தக் கண்டனம்.

௧௧. உறுதியென்பதற் குறுபொரு ணன்மையிற், பிறிது பொருளுளவெனப் பேசலுற்றவர்க்குக், கல்விகொல் வலி கொல் கண்மயக்கிற்றுங், கொழுக்கம்போன் மக்களுயிர்க் குறுதி பயபபதொன், றிழுக்கவிலையெனி னிதற்குவெலியெ வன், கல்வியென் றோதுதல் கண்சாய்ந்தோதினுாஉ, மவற்றிற் குழுடிவினி னஃதேதுனோயதால், வேறிலே யாதலிற் கூறுதறே ற்றும். இன்னும், "உறுதியே கடவுளொண்மையுத்தம மற்று நன்றும்" என்பது நிகண்டாதலானுந் தெளிக.

இது "பதவுரையின் பின் றொநந்துச் சொலப்பட்டவை யெல்லாம் விரித்துச் சொன்றலன்றி யோரொவழி விரித்துரைத்து விரிவுரையெனல் கூடாது" எனற்தக் கண்டனம்.

௧௨. "விரிவதிகாரத் துணிவுபயனே, டாசிரியவசன மென் றீரேழுரையே" என்பதற்கிளமையி னொத்துணேயுழந் துழந், துணர்த்தியதன்றியு மெழுத்தினும் விரித்தா, மழுக்

ஆனால், "கவியென்பரந்த வித்துவானெனக் கூடாது" எனற்குக் கண்டனம்.

கஅ. "புலவர் பாடுநரோதத்தர் புதுநபர் கவிகள்ளுளர்" எனவரு கின்ற நீதியுரையாற், வித்துவான்கவியிடை விசாரமற்றென்னே, நூல செய்யும் பிரசித்த வித்துவான்களின், நூல வழக்குணர்வ ரென்றே விட்டதென்னே!

ஆனால், "வித்துவானொருவன் வணங்குங் கடவுளை யெனல்வேண்டும், வணங்கப்பட்ட கடவுளையெனல் கூடாது" என்றதற்குக் கண்டனம்.

க௯. இவர், பேய்பிடிக்கப்பட்டா ரெனினுங்கே, பெயரு வாய்ப்ப பயனிலையாகிய வினைக்குறை, செயப்படு பொருளைக் கொண்டதென் றெங்ஙனமுணருமா, றுளதெனின் வித்துவானொருவன் வணங்க, வத்தொழிற்பட்ட கடவுளென்றுணர்வார்.

க-ம் அதிகாரம், உ-ம் நூற்றுரையில், "என்னெனக் கண்ணழித்தல் கூடாது" என்றதற்குக் கண்டனம்.

உ0. என்னெவன் வினாவினைச் சொல்லென் றுணரார்க், கென்னிடைச்சொல் வழக்கிடற்குள நீர்மை.

க-ம் அதிகாரம், அ-ம் நூற்றுரையில், "மூலத்திலுருவக மில்லை" என்றதற்குக் கண்டனம்.

உக. நீந்தலரிதென் றருணிறைவ, னடிக்குரு வகமைக் கதுமூலத்தே (அது தோன்றாமையாற் றோன்றுதற் பொருட்டு அப்புணையைச் சேராதார் கரைகாணாதவற்றுள்ளே யழுந்துவாராதலி னீந்தலரி தென்றுரைத்தனர்) என வெடுத்தெழுதிய முறையாருணர்தர, வணித்தாக விஃதேக தேசவுருவக, மென்றுங் காட்டினரினிக் காணார்க்குக், காட்டு

வா றென்பதற், கோர்பொருளோர்சொலி னோரறென்றே பொருள்படுமாறதூஉ மிருள கெடவுணர்க.

**அதனுள், "வழுவாதேனற்குக் குற்றமில்லாம லெனல் கூடாது" எனற்குக் கண்டனம்.**

உரு. வழுவாதெனு மெதிர்மறை வினைக்குஞ், சிறைக்குக், குற்ற மில்லாமலென் குறிப்பெதிர்மறைப்பொரு ளொவ்வாதெனிற் சேரா றுண்டாயென்குறைக், கின்றியென்குறிப்பெதிர் மறை யென்காட்டுவ, ரச்சினார்க்கினிய விசனையனையவந், நச்சி னார்க் கினியர்தொல் காப்பிய னார்புகல், பெயரெஞ்சுகிளவியும் வினையெஞ்சுகிளவியு, மெதிர்மறுத்து மொழியினும் பொரு ணிலைதிரியா, வென்றதிலிஃதியன் மன்றதிலைம்ம.

**அதனுள், "நெறியிலேயுயிர்களை நிலைநிறுத்துத லென்பது கூடாது" எனற்குக் கண்டனம்.**

உசு. இருவகைநெறியினும் வழிஇயினோரை, யந்நெறி நிறுத்தற் பொருட்டென வடிக்கடி, சுட்டிக்காட்டியுந் துணி வளத்துறூஅது, பால்கோடியற்கையர்•பால்கோடியற்கையிற், றெரிபிறுமாக்குநர் செய்கையிற் கைதுழாய், வான்மதிகோ டெனு மகாரினுமடமைகூர், வான்மதி கோடென வழங்கு மந்நெறியினை, யெடுத்துநிறுத்தற் கெனவுடன்பட்டமை, யடுத்தெவருடன்சொலி யாற்றற்பாலாம்.

**அதனுள், "சொல்லியவெனல் கூடாது" எனற்குக் கண்டனம்.**

உஎ. சொல்லியநெறியி னின்றெனல் வழாதிலை, பல்லிய னூன்மறை பகர்ந்தே கிடத்தலின். ஆசிரியர் தொல்காப்பிய

னார், "இறப்பே யெதிர்வே யாயிருகாலமுஞ், சிறப்பத்தோன்று மயங்குமொழிக்கிளவி" எனவும், "ஏனைக்காலமுமயங்குதல்வரையார்" எனவுங் கூறிய விலக்கணங்களை யையந்திரிபற வாய்ந்துணர்ந்தோராதலிற், சொல்கின்றநெறிக்க ணின்றெனச்சொற்றன, ரதுவழுவமைதியன் றெனினதுவழுவழூஉ எனக்காண்க.

**அதனுள், "என்னத்தினாலெனல் வேண்டும் என்னவெனல் கூடாது" எனற்குக் கண்டனம்.**

உஅ. ஆகும் என்பதை, ஆம் எனல் கூடாது, ஆமத்தினாலெனிற் பொருத்தமென்பதோர் புலமையினீங்கே, யென்னவெனல் கூடா தென்னத்தினாலென, வியல்வழுவின்னிலை யென்பருறுதவ, வியல்வழுவின்னிலை யினராதலினால். என்னெனின், ஆசிரியர் தொல்காப்பியனார், "அத்திணைமருங்கி னிருபாற்கிளவிக்கு, மொக்குமென்ப வெவனென் வினாவே" எனக் கூறிய வெவனென்னும் வினாவினைச்சொல் இக்காலத்து என்னெனவும், என்னை யெனவும் என்னவெனவும் மரீஇயிற்றாதலால், என்னவென்று கேட்பீரானாலென்னும் பொருள்பட என்னவென்றால் என நின்றதெனக் கண்டுணர்க.

**க-ம் அதிகாரம் க-ம் குறளுரையில் "அகரமாகிய முதலைக் கொண்டிருக்குமெனல் கூடாது" எனற்குக் கண்டனம்.**

உகூ. அகரமுதலவென் றதைதருமஃறிணைப், படர்க்கைப்பன்மைவினைக் குறிப்பினுக்குரை, யகரமாகிய முதலை

யுடையவென், றுரைத்ததுணரார்களு முணர்தரற் பொரு
ட்டுரன், ககரமாகிய முதலைக்கொண்டிருக்கும், மென்றியல்
வழுவோ டிசைக்கும்பொருள்வழூஉ, வாராசீர்மையி னுராய்ந்
துரைத்தமை, யோராரென்கட னுடையவுடைத்திக்கு,வெளி
ப்படையெனக்கொடு களிப்படைந்தனரால்.

அதனுள், "அகரத்திற்நந் தலைமையோலி
விகாரத்தின்று" என்றநக் கண்டனம்.

௯0. அகரக்குத்தலைமையவ் வொலிவிகாரத்தினு, மின்
றெனி னன்றுநன் றிசைப்பது நேண்மின், குறைநக்கியயர்
நடத் தினன்கூந் துணர்வரியா, ரிழைநகயயர்படத் தின
னன்றியென்னுத், தேவரோ முனிவருந தெருண்டன ரியோ
கிய, ரியாவருந் துதிசெய வமைந்தன ரதாஅன்று, தங்கத் தா
ரணி தமிழ்வளர்த் திருஉறன், றங்கத்தார்பீனவன் சங்கத்தார்,
பலகைதாழ்ந்திரப்பப் பரிநறுதன்செய்கையே, மேற்படக்
குறட்பா வியனமிழ்தளித்துக், கடவுளர் துதித்தொண் கவி
மணிமாலை, சூட்டபெற்றனர் தொல்லுலகதாஅன்று,பன்ன
ரும் பெருமபுகழ் பரப்பினர் திசைதிசை,யின்னர்தா மெழுத்
தெலா மகரமுதலவேன், றெவ்வாறுரைட்பர் மற்றெவ்வா
தாதலா, லொலிவிகாரத்தினு னுதித்தன வெழுத்தெலா, மவ்
வொலி முயற்சிநான் கண்ணநாப பல்லிதழ், வவ்வியவவற்
றுழைமன்னு மூவகை, முயற்சிக்கு மங்கா முயற்சிகாரணமா,
மதனுற்பிறப்பதொன் றாகலானு, மேனைய வேனைமுயற்சியிற்
பிறபபினு, மங்காத்தல் வேண்டிற்றுதலானுமவ், வொலி விகா
ரத்தெழுத் தொன்றெழி நானும், றினுபிது சிறத்தலி னியன்

முறைநிறுபபோர், "சிறப்பினு மினத்தினுஞ் செறிந்தீண்டம் முத, னடத்தருமே முறையாகும்மே" எனக் கூறி முன்ன ரகரத்தைவைத்து முறைசெயலால், எழுத்தெல்லா மகர முதல வெனல்பொருந்திற்று எனக்காண்க. நாதமாத்திரை யகார வடிவிற், றுதலி னிரண்டிடத் தமைந்தது தலைமை, விரவியுந் தனித்து மெனவரு மிரண்டிடம், (இனி) இறைவன் விராட் டெ னிரணியகருப்ப, னந்தரியாமி கூடத்தரென் விகாரியா, யெல்லாவுலகிற்கும் வல்லகாரணனாய், முயற்சிவகையின் முன் னின்றவை முழுவதூஉ, முணர்தலானும் புணர்விகாரமாஞ், சுபாவசை தநிய மாததிரமா யபாவமாய், நனிதுன்று பிரம மெனத் தனிநின்றுலகெலாங், காட்சியின் வைகுறூஉ மாட்சி யானு, மடுத்துக் காட்டிய வகரமிறைவற், கெடுத்துக் காட் டணி யெனலுமுய்த் துணர்மின். இங்ஙனமுணராது கூறிய விவரணையர் பலருங்குழீஇ யித்திருவள்ளுவர் நூற்கும்பரிமே லழகருரைக்குங் குற்றம்வாராமற் காக்கக் கடவோமென்ற சொல்லுள்ளே மறைந்து நின்றவற்றை முழுவதூஉங் கெடுப் பவ ரிவரென்றே கோடுமொரு தலையாவே. என்னெனின், விகாரத்தானன்றி நாதமாத்திரை யானவியல்பாற் பிறத்தலான் அகரத்திற்குத் தலைமையு மென்ற தொடர்பி விவர்கட்குப் பட்டபொருள் விகாரத்தில்லை யியல்பாற்றலைமை யுண்டென் றன்றே. அங்ஙனமாயின தற்கியைய விவரச்சிறப்பதிப்பிக்கத் தொடங்குங்கால அக்குறளுக்கும் பரிமேலழக ருரைக்குமாறு கவே பதிபபிப்ப ரென்பதற்கையமின்றே; மேற்றொட்டு மிவ் வாறே சான்றோர் நூல்களையெல்லாங் கெடுத்தமையான். இனி இவர் கருத்தின்படி யிருத்தல்வேண்டிற்றேல், நாதமாத்திரை

யானவியல்பாற் பிறத்தலின் அகரத்திற்குத் தலைமையும் அது போ லியற்கையுணர்வான் முற்றுமுணர்தலின் ஆதிபகவற்குத் தலைமையுங் காண்க என்றன்றுகொல்லோ விருத்தல்வேண் டிற்று. மண்ணுனன்றி நூலானியல்வதுபடம் நூலானன்றி மண்ணுனியல்வதுகட மென வேதுவாகாததனை விதந்தெடு த்து மறுத்தலிற் பிறிதோர் பயனுமின்றும்; அதுபோல விகா ரத்தானன்றி யென்பதூஉஞ், செயற்கை யுணர்வானன்றி யென்பதூஉம், வானாகூறலாய் நின்றுபயனின்மை, யென்ற தோர் குற்ற நூற்கெவரா னெய்துறாஉ, நன்குய்ந்து நிலீஇயர் நன்னெறி, பொன்றுக் கதியுடன் புகழ்பெறற் பொருட்டே.

முற்றிற்று.

---

இனிச் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினேற்குப் பல்வாழ்வாட்·' சில்பிணிப் பேரறிவினோர் கூறிய விலக்கண விலக்கியநூல்கண் முழுவதூஉ முணர்ந்துணர்த்தி யச்சிற் பதிப்பித்தற்கேலாதென் றிதுகாறும் வாளாவதிந்தவிரதத்தை யித்திருவள்ளுவர் நூலும் பரிமேலழகருரையும் வலிந்து பற்றிச் சிதைத்ததனைக் குரவனைப்புகழ்ந்து, தன்னிகரில்லாத் தலைவனைத் தாழ்ந்தாங், கென்னி னியன்றவாற் றினி துணர்ந் துணர்த்தித், தொடங்கின னச்சிற் பதிப்பித்தற், கிடங்கெழு சென்னை யியல்வயினோரே.

பூமிசுந்தரமின்றியமையாச்
சோமசுந்தர குருதுணை யெனக்கே.

---

# ம. நாராவலர் புஸ்தகசாலை,

## தம்புசெட்டி வீதி, சென்னை.

**திருவாசகம்** —(புதிய பதிப்பு) மாணிக்கவாசக சுவாமிகள் ஆப்டோன் படத்துடன் இப்பதிப்பில் செய்யுள்களை மூலத்தை வாசிக்கும்போதே கூடியமட்டும் பொருள் விளங்கும்படி சந்தங்கெடாத வண்ணம் சந்தி பிரிக்கப்பெற்று, பைகா (பெரிய) எழுத்தில் நூதனமாய் அச்சிடப்பட்டுள்ளன. மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரமும் காலவரையறையுடன் நூதனமாய் எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளது. உயர்ந்த கிலிட்டு பயிண்டு ... ... ... 1 0 0

**திருவெங்கைக்கோவை** —(சிவப்பிரகாச சுவாமிகளருளிய இவ்வரிய கோவைக்கு நூதனமாய் எழுதப்பட்ட பதவுரை கருத்துரை விசேஷ உரைகளுடன்) உயர்ந்த கிலிட்டு பயிண்டு ... ... ... 2 8 0

**நைடதம் மூலமும் உரையும்** —(புதிய பதிப்பு) இதில் அன்னமும் தமயந்தியும் அரசனும் உயர்ந்த ஆப்டோன் வர்ணப்படமும் 27-ல் தனியாய படங்களும் அடங்கியுள்ளன. உயர்ந்த கிலிட்டு பயிண்டு ... 2 0 0

**ஸ்ரீ விவேகானந்த விஜயம்** —விவேகானந்த சுவாமிகள் திவ்விய சரித்திரமும் அவர் செய்த அற்புதமான பிரசங்கத்திரட்டும் [சுவாமிகள் படத்துடன்] காலிகோ பயிண்டு உயர்ந்த கிலிட்டுடன் .. ... ... 1 4 0

**ஸ்ரீ சங்கர விஜயம்.**—ஆதி சங்கராசாரிய சுவாமிகள் சரித்திரம். (ஆதி சங்கரர் படமும், சிருங்கேரி ஸ்ரீ சாரதாம்பாள் படமும் கூடியுள்ளது) காலிகோ பயிண்டு உயர்ந்த கிலிட்டுடன் ... ... 1 0 0

**ஸ்ரீ திலகர் விசாரணை,** அல்லது 2-வது கேசரி இராஜ நிந்தனைக் கேஸ்: ஸ்ரீ பாலகங்காதர திலகர்மீது பம்பாய்க் கவர்ன்மெண்டாரால் சமீபத்தில் கொண்டுவரப்பட்ட இராஜ நிந்தனைக் கேசில் நடந்த சகல நடவடிக்கைகளும் ஆதியோடந்தமாயத் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன: திலகர் சரித்திரமும், உருவப் படமும் கூடியது ... ... ... 0 12 0

உ

சிவமயம்.

அருட்பெருஞ்ஜோதி.

# ஷடாந்தசமரசசுத்தசன்மார்க்கத் தீபிகை.

இது

திருவருட்பிரகாசவள்ளலார் தமையனார் பௌத்திரரும்,
பிரசங்கசிகாமணி, வடிவேலுப்பிள்ளையவர்கள்
தமையனார், வித்வான் சி. நமசிவாயப்பிள்ளையவர்கள்
ஜேஷ்டகுமாரருமாகிய

சி. இரத்தினசபாபதிபிள்ளையவர்கள்

இயற்றி,

மதுரைத்தமிழ்ச்சங்கத்து மஹாவித்துவான்
சித்தாந்தசரபம்-அஷ்டாவதானம்
பூவை-கலியாணசுந்தரமுதலியாரவர்களால்
பார்வையிடப்பட்டு,

சென்னை,
பண்டிதமித்திர அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

1909.

இதன் விலை அணா - ௩.

உ

சிவமயம்.

—o—

அருட்பெருஞ்ஜோதி.

# ஷடாந்தசமரசசுத்தசன்மார்க்க தீபிகை.

—o—

இது

திருவருட்பிரகாச வள்ளலார் தமையன் பௌத்திரரும்,
பிரசங்கரத்நாகரம் சி. வடிவேலுபிள்ளை யவர்கள் தமையன்
வித்வான் சி. நமச்சிவாயபிள்ளை யவர்கள
ஜேஷ்டகுமாரராகிய

சி. இரத்தினசபாபதிபிள்ளை யவர்கள்

இயற்றி,

மதுரைத் தமிழ்ச்சங்கத்து மஹாவித்துவான்
சித்தாந்தசரபம்-அஷ்டாவதானம்
பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்களால்
பார்வையிடப்பட்டு,

—o—

சென்னை,
பண்டித மித்திர அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

1909.

இதன் விலை அணா - ௪.

# அறிவிப்பு.

---

## இனி அச்சிற் பதிப்பிக்கப்படும் புத்தகங்கள்

---

சன்மார்க்க போதம்.

சமரச அகவல்.

உத்தரஞான சிதம்பர வெண்பா.

சமரச இலக்கண வினு விடை.

# சிறப்புப்பாயிரம்.

*

மதுரைத் தமிழ்ச் சங்கத்து மகாவித்துவான்
சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்
பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்க ளியற்றிய
நிலைமண்டிலவாசிரியப்பா.

அருவமு முருவமு மருவுரு வதுவு
மொருபெரு முதலென வுலகந் தேர்வான்
பொதுவாய் விளங்கிப் பொற்புற வோங்குபு
விதுதவழ் குடுமி வியப்பிற் றழீஇப்
பொன்வரை யென்னப் பொலிவி னிறீஇ
மின்மலி கனக மேயப் பெற்ற
வம்பல நாப்ப ணானந்த நிர்த்தன
மும்பர் பராவ வுவகையி னுஞற்று
நம்நட ராஜ னற்சரண் வழுத்த
வம்ம வம்ம வளவில் கவிகள்
தேன்கற கண்டு சீனி முப்பழ
மான்றரு வமுத மளவிய சுவையினு
மிக்க வினிக்கவு மேவிய வன்பர்
நெக்குநெக் குருகவு நேர்மையின் பாடிய
வருட்பிர காச வள்ள லென்னத்
தெருட்டுமே தினியிற் றிகழ நின்ற
வராமங் கனாறு மமல வடலூ
ரிராம லிங்க வேந்தல் சோதர
னெனவவ தரித்த வெழிற் சபாபதிவே
ளனவற் கினிய வருமைப் பௌத்திர
னிமிழ்பிர சங்க விரத்தி னாகரந்
தமிழறி வடிவேற் றமைய னாக

## சிறப்புப்பாயிரம்.

வமிச முற்ற வருங்கலை தேர்ந்த
நமசி வாய னற்றவப் புத்திரன்
சீர்கரு ணீகச் செல்வர் மரபிற்
பேர்பெற வந்த பிரபல வறிஞன்
முந்திய தெலுங்கு மொழிபயில் கின்ற
பந்தர் நகரின் பாங்கர் சமைந்த
பாவனைச் செல்ல பல்லி யரசன்
தேவர கோடை சீர்சமஸ் தானம்
பண்டித னாகிப் பன்னிரண் டாண்டங்
கெண்டிசை யும்புக ழியம்ப வாழ்ந்தோன்
கருதரு மெண்ணில கருவி நூல் சாத்திரத்
திருதய முணர்ந்த விரத்தின சபாபதி
மருமமாச் சூழ்ந்த மந்தண மெவையுங்
கருணையா யவனியிற் கழற வெண்ணுபு
திருமந் திரமுந் திருவருட் பாவு
மிருநூல் களுமே யேற்றவா தாரமாச்
சுத்தசந் மார்க்கச் சூட்சியு மேமச்
சித்தியுஞ் சமயச் சித்தி நிலைகளுள்
தத்துவ நீக்கமுஞ் சாகாக் கல்வியுஞ்
சுத்தம் பிரணவம் சூட்சும ஞானமும்
வித்தையின் விளங்கு விசேடசா மான்யமு
முத்தர பூர்வ வுயர்சித் தாந்தமு
மூவகைப் பாடிய முடிவு மைந்தொழத்
தாம்வகை விளக்கமு மவற்றின் பொருளு
மருங்கலை யின்னமு மனேக மாகச்
சுருங்கச் சொல்லி விளங்க வைத்துச்
சடாந்த சமரச வேதசன் மார்க்கநூல்
தடாரிபோன் முழங்கத் தானியற் றினனே.

# சாத்துகவிகள்.

—*—

பெங்களூர் அருட்பெருஞ்சோதி சபையின் தாபகரும்,
சடாந்தசமரச சுத்தசன்மார்க்க சங்கத்தாருள் ஒருவருமாகிய
மகாவித்வான் சித்தாந்தரத்நாகரம் அ·வேங்கடசுப்புபிள்ளை
அவர்கள் கருத்து.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

அருட்கிரண பானுவெனவகத்திமிர
மிரித்தருள்வான வதரித்தோன்
தெருட்கிரண மதிஞர் புகழிராமலிங்க
நாமவருட் சித்தன்மேனுண்
மருட்கிரண மாயையினுன் மாழாந்த
மாந்தருய்ய வழங்கும் வாய்மைப்
பொருட்கிரணச் சடாந்த சமரச சுத்த
சன்மார்க்கம் புவிமேலோங்க. (1)

அன்னவருட் பிரகாச வள்ளலடி
யார்க்கருளு மான்மபோத
மென்னவருஞான விசாரத்தெளிவின்
சிந்தனையா லிதயந்தேறித்
தன்னதுரை முழுதுமம்மான் வாய்மலர்ந்த
தூமொழியுஞ் சார்ந்திலங்க
நன்னயஞ்சேர் சமரசமுங்காய சித்தி
யேமசித்தி நலமுந்தோன்ற. (2)

கடந்தவரும் பவஞ்சநெறி தொடர்ந்தவரும்
　　படித்தளவிற் கரங்குவிக்க
நடந்தருசிற் சபாநாதரனவரத
　　தாண்டவத்தை நவிற்றுசிற்குஞ்
சடந்தசமரச சுத்த சன்மார்க்க
　　தீபிகைப் பேர்தரித்த நூலை
மடந்தவிரத்திடன் குலவமேனேக்கித்
　　தானுக்கி வழங்கினுனல். (3)

வழங்கினவன் யாவனெனில் வடற்கணருட்
　　பிரகாச வள்ளலென்றே
முழங்குசிறப் பபிதான னிராமலிங்கப்
　　பெருந்தகைக்கு முன்னேன் பன்னூல்
பழம்பொருடேர் சபாபதிவேடரு நமச்சிவாய
　　மகிபன்னேர் செல்வன்
கிழங்கெடுக்கு மெய்யுரவோ னிரத்தின
　　சபாபதிப்பேர் கிளர்வல்லோனே. (4)

இனையவனேர் பெரியவனே வியற்றியதும்
　　பெருநூலோ வெனவெள்ளேன்மின்
பனையளவாந் தருகிழலைத் தினையளவாம்
　　பனித்துளியுட் பார்க்கிலீரோ
கனைகடலுண்டவர் வடிவை யெள்ளுவரோ
　　விராமலிங்கர் கடைக்கண்ணேக்கிற்
புனைகருணைக் கிலக்கான பேரறிவனறிவாழும்
　　புகலற் பாற்றே (5)

சீராளன் றேவர்கோட்டைச் செல்லப்பல்லி
மன்னன் றெளிவுமேவ
வாராயும் பன்னூலுமவற் குணத்தும்
புலவனென வாங்கிருந்தோன்
பேராலுங் குணத்தாலு நல்லவரதனமாகப்
பிறங்கா நின்றோன்
தாராளமாவழங்குஞ் சன்மார்க்க தீபிகை நா
றழைக மாதோ. (6)

---

சென்னை மாநி - இந்து ஜனபூஷணி பத்திராதிபர்
வித்வான் - திருமயிலை வி. சுந்தரமுதலியாரவர்க ளியற்றிய
அறுசீரடியாசிரிய விருத்தம்.

---

சித்திதரும் புருடார்த்த நான்கமையுஞ்
சின்மயா னந்த ஞான
பத்திதருஞ் சன்மார்க்க நிலையறியப்
பரிந்துதிரு மூலர் முன்செய்
முத்திதரு மந்திரத்தி னுட்பொருளு
முதறினு ருவகை கொள்ளச்
சத்திதருந் திருவ ருட்பாக் கனியிலு றுஞ்
சாரமதைத் தக்கார்க் கெல்லாம்.

பெருமைமிகும் பரமிரத்ன சபாபதியாம்
பிள்ளைப்பேர் பெற்ற சீலன்
றிருவருளாற் சடாந்தசம ரசவேத
சுத்தசன் மார்க்கதீ பிகையென்றோது
மருமைநூற் செய்ததற் கரியபிர
மாணங்க ளாய்ந் தெடுத்தே
யொருமைநிறை செந்தமிழில் வசனகா
வியமாக வுரைத்தா னன்றே.

---

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப் பண்டிதர்
ஈக்காடு - இரத்தினவேலு முதலியாரவர்க ளியற்றிய
அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

---

மமரகற்றுந் திருவருட்பா வாய்மலர்ந்த
வள்ளலுக்கு மகிழ்செய் பேரன்
குமரனையே நிகர்கல்வி கொளுமிரத்ன
சபாபதிப்பேர் கொளுநா வல்லோன்
தமரநீர் சூலவவனிப் புலவர்களி
கூர்ந்திடவே தருச டாந்த
சமரசசன் மார்க்கசுத்த தீபிகையின்
சிறப்பதனைச் சாற்றலாமோ.

மஹா வித்வான் - புரசை அஷ்டாவதானம்
சபாபதிமுதலியாரவர்கள் மாணக்கரி லொருவரும்
சென்னைத் தொண்டைமண்டலம் ஹைஸ்கூல் தமிழ்த் தலைமை
பண்டிதருமாகிய திருமழிசை - வீரசிம்மாசன மடம்
ஸ்ரீ சாந்தலிங்க ஸ்வாமிகளாதீனம்
வித்வான், சிவப்பிரகாசய்யரவர்களியற்றியது.

---

திருஞானச் சிதம்பர மிராமலிங்கேந்திரன்
றமையன் சபாபதிமால் பௌத்ரனென்ன
வருநமசிவாயவேள் மைந்தன் கல்வி
வளர்ந்திகழி ரத்தினசபாபதிப்பேர்
தருவனையவா மாத்தியகுலன் சடாந்த
சமரச சுத்த சன்மார்க்க தீபிகையா நூலே
யுருமருவுமூலர் நூற்குரையாய்ச் செய்தே
யுலகிநற்கீந்திட்டதிற னுவக்கற் பாற்றே.

— ௧ —

சென்னை இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர்
கோ - வடிவேலு செட்டியாரவர்க ளியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

---

சன்மார்க்க முறுமார்க்க மெனக்கொண்டிங்
கருள்புரிந்து தவரா வாய்மை
பன்மார்க்கத் தாலுரைத்த வள்ளலார்
பணித்தவற்றின் பயனை யெல்லாஞ்

சொன்மார்க்கத் தொருவருமுற்றுச் சுகம்பெறச்
சடாந்தசமரச மாஞ்சுத்த
சன்மார்க்க தீபிகைரத் தினசபா
பதியியற்றிச் சார்ந்தான் சீரே.

---

திருவருட்பிரகாச வள்ளலார் தமையன் மருகரும்,
சமரசவேத சுத்தசன்மார்க்க சங்கத்து மஹா வித்வான்களி
லொருவருமாகிய சைவபுராணிகர்
பொ - சுந்தரம் பிள்ளையவர்கள் குமாரர்
பொ - பரமசிவம் பிள்ளையவர்க ளியற்றிய
அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

---

மன்னியநல் ஷடாந்த சமரசவேத
வுண்மையினை மகியோர்தேறத்
தன்னிகரில்லரிய சன்மார்க்கதீ
பிகையெனு நூல் சதுராச்செய்தான்
மன்னியநம்மருட்கோமான் வடலூர்ஞா
னச்சீமான் வழியுதித்த
நன்னயன் சிதம்பர ரத்தினசபா
பதியென்னு நாவலோனே.

சிதம்பரம் - பிராமண குலம் மகான் சிவப்பிரகாசயதீஸ்வரர்
சீடர்களிலொருவரும சித்தாந்தசரபம் அஷ்டாவதானம
பூவை - கலியாண சுந்தரமுதலியாரவர்கள்
மாணாக்கர்களி லொருவ ாரா ப
காவித்தண்டலம்-மதுரகவி ஜோதிட வாருட ச ஙிதப்புலமை
சு - ஆறுமுகசுவாமிகள் இயற்றியது.

---

முத்தியினுக்கிலக்காகும் வேதாந்த சமரசவேத
முடிவைத தேர் ்து
சுத்தசன்மார்க்க தீபிகையெனவோர்
பனுவலினை சுகமாச்செய்தான்
பத்திநெறியினைப் பயக்கு நன்மார்க்கத்
துறையினைத்து பண்பிற்றேர்ந்த
புத்திமிகுஞ சிதம்பர ரத்தினசபாபதி
யென்னும் புலவன்றானே.

---

சென்னை இந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர்
கோ - வடிவேலு செட்டியாரவர்கள்
மாணவரி லொருவராகிய
தே - கிருஷ்ணசாமிப் பாவலாரவர்க ளியற்றிய
அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

---

தெருட்டருஞ்சி வானந்த நன்னிலையைத்
திகழ்பெறநற் சீடர்க்கூட்டு

மருட்பிரகா சன்னடிக்கே யன்பு பிருந்
தவன்வழியே யார்ந்த செம்மன்
மருட்பிறவி யிரியவஷ்டாங் தசமரச
சுத்தசன் மார்க்க தீபம்
பொருட்பொலிவிங் குறமொழிந்தா
னிரத்தின சபாபதியென் புனிதன் மாதோ

———— o ————

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை.

# ஷடாந்த சமரச சுத்தசன்மார்க்க தீபிகை.

## முகவுரை.

"அருளுறுங் கயமுகத் தண்ணலை பாதமும்
பொருளுறு சண்முகப் புனிதன் றாள்களும்
தெருளுறுஞ் சிவபிரான் செம்பொற் கஞ்சமும்
மருளறநாடொறும் வணங்கி யேத்துவாம்."

வேதாகமேதிகாச புராணசாத்திரங்கள் ஆன்மகோடிகளகன்மத்திற்குத் தக்கபடிபொருள் கொடுத்துக்கொண்டிருத்தலின் அவற்றிற்கேற்பட்ட பாஷ்யங்கள்பலவாய், சமயங்கள்பலவாய், கொள்கைகள்பலவாய், சாதனங்கள்பலவாய், ஒழுக்கங்கள்பலவாய் விரிந்தன. ஆயினும்அவ்வவற்றால்பிரதிபாதிக்கப்படும் உண்மைபொருளொன்றேயென்பதும் அதனையரிதற்கேற்ற அறிவு எல்லார்க்கும் பொதுவென்பதும்நிச்சயமாகலின், அத்தகையஅரியபெரிய விஷயமாகிய அனுபவத்தினைக் கரதலாமலகமெனக் காட்டத்திருவருளை முன்னிட்டுக்கொண்டு வெளிவந்தது ஷடாந்த சமரச சுத்தசன்மார்க்கதீபிகை என்னும் சாத்திரம். இதுஅளவைநூலிற்குறித்தபிரமாணங்கட்கு முரணுறாதபடி சாமானியமாகவும் விசேடமாகவும் விடயங்களைவிளக்கும். இந்திரியகரண ஜீவஆன்மவொழுக்கங்களிற் சிறந்தார்க்கு இச்சாஸ்திரம்அந்தர்முகபாவனையில் விளைந்தநூலாகக் காண்பர். அவ்வொழுக்கங்களில் மாறுபட்டார் பகிர்முகபாவனையில் விளைந்த நூலாகக் கா

ண்பர். இதுவாயையடிவாயையென வந்ததிருகூட்ட மரபின ரனுபவித்தற்கேற்ற சன்மார்க்கஞான பொக்கிஷமாம். ஆங் காங்குள்ள பரிபாஷா சொற்களுக்குப்பொருள் முன்பின் முரணுது இடநோக்கிக் கிரகித்தல்மரபாம். இதில்முக்கியமாக அனுபந்த சதுட்டயம, ஷடாந்தம, சமரசம், சுத்தம், சன் மார்க்கம், சத்து, சுத்தம், சமயசன்மார்க்கம், மதசன்மார்க்க ம், சுத்தசன்மார்க்கம், ஏமஸித்தை என்ற கலைப்பெயர்களுடன் கூடிவிளங்கி ஒவ்வொன்றும் பற்பலவிடப்பிரியங்களைப் பெற்று வைதிகசீலர் பலரும்கொண்டாடத்தக்கதாயது. திருவருட் பிரகாசவள்ளலாருக்கு அடிமைபூண்டொழுகும் நியமத்தி னுலும் அப்பெருமான் திருவருள் உணர்ததப்பெற்ற அருள் உணர்ச்சியினுலும் விளங்கிய சமரச சன்மார்க்கவிளக்கம் இனையது என ஒருவாறு சிறியேன் புன்மதியிற்றேன்றிய வண்ணம் இத்தீபிகையை உலோகோபகாரமாக வெளிபி டத்துணிந்தனன். இவ்வசனநடையால் இயற்றப்பட்ட இந் நூலில் திருவருட்பிரகாசவள்ளலார் பற்பல சமயங்களில் தமது பக்தஜனங்களுக்கு உபதேசித்தருளிய காலையில் வெ ளிப்பட்ட ஆப்தவசனக் குறிப்புகளைப் பெரும்பாலுந் தழு வியுள்ளேன். அவற்றிற்கு மேற்கோளாகத் திருமந்திரத் தின்கண்ணுள்ள பிரமாணங்களையுந் திருவருட்பாவிற்கண்ட அநுபவஞானப் பாசுரங்களையு மெடுத்தாண்டுள்ளேன். சம ரச ஞானனுபவிகளாகும் ஞானச்செல்வர்கள் இந்நூலின் கண் குற்றங் கவனியாது குணத்தையே பாராட்டிக்கொண் டருள்வர் எனப் பணிவொடு பிரார்த்திக்கின்றேன். நூல் முழுவதனையும் பொறுமையாயும் நுண்மையாயும் ஆய்ந்த பின்னரே அருமைபெருமை விளங்குமாகலின் முன்னுரை யை இவ்வளவில் நிறுத்திக்கொண்டனம். சுபம்.

தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி.

சி. இர.

திருச்சிற்றம்பலம்.

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை.

# ஷடாந்த சமரச சுத்தசன்மார்க்க தீபிகை.



சித்திவிநாயகர் வணக்கம்.

நன்மார்க்க மீதென்று நான்மறையின் செம்பொருளைப்
பன்மார்க்கா யாரும் பரிந்துணர்வா—னன்மார்க்க
சித்தியினுக் கேற்றநூல் செய்திடற்கிங் கென்மனமே
சித்திவி நாயகனைச் சேர்.

அவையடக்கம்.

கற்றவர்கள் காசினியிற் கனிவாகக் கன்மவினைப்
பற்றறவே பகர்ந்தநூற் பட்டநா லேயாகும்
உற்றவருங் கலைகளினி லொருசிறிது முணராத
சிற்றறிஞன் செய்தநூற் சிலந்திநா ணிகர்த்திடுமால்.

வேதாகமங்களின் துணிபொருளையும் அதனைச் சுருக்கியும் விரித்துங் கூறும் சுருதிஸ்மிருதி புராண இதிகாசங்களின் உள்ளக்கிடைக்கையும் தமிழ்மக்கள் உண்மை நிலை கண்டு எளிதில் உய்யும்வண்ணம் பரமாத்மசிகாமணிகளாய்த் திருவவதாரஞ் செய்து வேதாகமங்களின் துணிபொருளை தேவாராதி வாயிலாக ஐயந்திரிபற உணர்த்திய திருஞான சம்பந்தமூர்த்தி முதலிய பரமாசாரியர்களது இருதயத்தை

யும் சுவானுபூதிவாயிலாகச் செவ்வனே யுணர்ந்தும் திருவருட்பிரகாசவள்ளலார் திருவாய் மலர்ந்தருளிய திருவருட்பாவில் பெறப்படுகின்ற ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்கத்தின் சொரூபத்தைச் செவ்வனேயுணராது மாறுபடுகின்றவரது மயக்கமகலுமாறு ஷடாந்த சமரச சுத்தசன்மார்க்கதீபிகை சாதுக்களின் ஆசீர்வாதத்தைப் பெற வெழுதலாயினேன்.

அநுபந்த சதுட்டயமுணராவிடத்துப் படிப்போர்க்கு நூலில் பிரவிர்த்தியுண்டாகாமையின் முன்னர் அவையறியத் தக்கனவாம்.

---

## அநுபந்த சதுட்டயம்.

——0——

### விஷயம்சன்மார்க்கம்.

இச்சன்மார்க்கந் தாதமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம் சன்மார்க்கமென நால்வகைத்தாம். இவற்றின் பொருள் கடவுளுக்கு அடிமையாதல், புத்திரனாதல், சிநேகனாதல், * முதல்வன்மயமாதல் என்பன. ஈற்றது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் சாதன நான்கனுள் நான்காவதாய் * ஞானத்தில் யோகமாம். இதனை வேதாகமங்கள். நிவர்த்திமார்க்கமெனக் கூறும் பிரவிர்த்திமார்க்கம்

---

* முதல்வன்மயமாதல் என்றது, குருடோகம்பாவனைபோலச் சிவோகம் பாவனைகூடியிருத்தல்.

* இது ஞானத்தில் யோகமாக மேற்பட்ட பரபோகம் திருவருள் வியாபகத்தில் அமிழ்தலென்றபடியாம்.

கர்மகாண்டத்திலும் நிவர்த்திமார்க்கம் ஞானகாண்டத்திலுங் கூறப்படுகின்றன

ஆணவத்தால் முக்குண சம்பந்தமுடைய ஜீவர்கள் குணமற்றதை யுபாசித்துச் சுத்தமாதிகளை யடைவது மிக வருத்தமாதலின் முதலில் சகுணப்பிரமமாகிய அஷ்ட முகூர்த்தங்களை உபாசித்து அதனால் சகுணமுத்திவாய்க்கப் பெற்றவர்கட்கே பின்னர் நிர்க்குண முத்தியென்னுஞ் சுத்த மாதிகளுண்டாம். இவற்றைப் பிபீலிகாமார்க்கமெனக் கூறுவர். ஞானயோகமார்ந்தார்கள் சுத்தமாதிகளை அடையுமவ்வியக்சகதியை விகங்கமார்க்கமெனப் பலபடவிரித்து ஆன்றோர் கூறுவதால் அதுசன்மார்க்கமெனப் பொதுப்படக் கூறப்பட்டது.

திருவருட்பா.

மார்க்கமெலாமொன்றாகுமாநிலத்தீர்வாய்மையிது
தூக்கமெலாநீக்கித்துணிந்துளத்தே—யேக்கம்விட்டுச்
சன்மார்க்கசங்கத்தைச்சார்ந்திடுமின்சத்தியநீர்
நன்மார்க்கஞ்சேர்வீரிந்நாள்.

---

* இந்நூலினுக்கு முன்னூல் திருவருட்பாவாகலினாலும், அவ்வருட்பா திருமந்திரத்தினை யாதாரமாகப் பிறந்தமையாலும் அம்முறைபற்றி அருட்பா முந்தியும் திருமந்திரம் பிந்தியுமாகக் காட்டப்பட்டது.

## திருமந்திரம்.

மார்க்கஞ்சன் மார்க்கிகள் கிட்டவகுப்பது
மார்க்கஞ்சன் மார்க்கமேயன்றிமற்றொன்றில்லை
மார்க்கஞ்சன் மார்க்கமெனுநெறிவைகாதோர்
மார்க்கஞ்சன் மார்க்கமாஞ்சித்தயோகமே.

## சம்பந்தம்.

எண்குணத்தனாகிய இறைவனதருளே உயிர் பரமெனும் பகுதிமுதற்படியாம். அந்வயவியதிரேகங்களால் சாமானிய விசேடமாகிய விடயத்திற்கும் அவ்விடயத்தைக் கூறும் நூலுக்குமுள்ள தொடர்பு சம்பந்தமாம். அது குருசீடன் என்னும் பரம்பரைத்தொடர்பும், தந்தைமகன் என்னுங்கால் வழித்தொடர்புமாம். ஈண்டு அந்வயம் பிரமேயம் அபிதேயமென விருவகைத்து. பிரமேயம்-எட்டென்னும் அகரவுயிரும் இரண்டென்னும் உகரவுயிருங்கூடிய பத்தென்னும் யகரம். அபிதேயம்பூதமுதல்நாததத்துவ மீறுயுள்ளவை. பிரமேயம் உயிர்பரமெனவும், அபிதேயம் பூதமெனவும் கூறுவதில் பூ என்பதற்கு மலர்ந்தது பிரகாசம் எனவும், த-என்பதற்கு சடித்தது காரியம் எனவும், ம்-என்பதற்கு ஊன்றியது நிலைஎனவும் பொருளாம். எனவே அதற்கு நிலைபெற்ற காரிய அக்நிப்பிரகாசமென்றும் பூதகாரிய அக்நியென்றும் பெயராம். பூ-என்பதில் உகர உயிரும், தம்-என்பதில் அகரவுயிருங்கூடியதொகை அ-

உம், ௐ-ௐ ம், ஆகபபத்தாகிய யகரமாம். இவைபத்தும் பொது ஸ்தானங்களாகச் சன்மார்க்க பாதத்திற் சொல்லப் படுவனவாம். அவை மண், ஜலம், அக்நி, காற்று, வான், பிரகிருதி, மாயை, சூரியன், சந்திரன், ஆத்மா என் பனவாம. இவை அபிதேயமெனவும் எட்டிரண்டால் உயிர்பரமெனவும் பத்து பொது ஸ்தானங்களெனவுங் கூறப்படும. இவற்றின் அநுபவம் நவநிலை அவை விந்து நாதம் பரவிந்து பரநாதம் அபரவிந்து அபரநாதம் திக்கி ராந்தம் அதிக்கிராந்தம் அருள் என்பன.

திருவருட்பா.

எட்டிரண்டென்பனவியலுமுற்படியென
அட்டநின்றோங்கியவருட்பெருஞ்ஜோதி.

திருமந்திரம்.

எட்டுமிரண்டுமினிதறிகின்றிலர்
எட்டுமிரண்டுமறியாதவேழைகள்
எட்டுமிரண்டுமிருமூன்றுநான்கென
பட்டதுசித்தாந்தசன்மார்க்கபாதமே.

## பயன்.

சாகாக்கல்வி, கடவுணிலை, தத்துவநிக்ரகம், ஏமசித்தி யென்னு மிவற்றால் என்றும் அழியாத சுத்தம், பிரணவம், ஞானம் என்கிற எல்லாம் வல்ல சர்வசித்தி வல்லபங்களைப்

பெற்று அவற்றால் அருட்போகம், அனந்தபோகம், சிவ போகம் முதலிய நித்தியபோகங்களை அநுபவிக்கப்பயனும்.

திருவெருட்பா.

சாகாதகல்விதரமறிதல்வேண்டுமென்றும்
வேகாதகாலுணர்தல்வேண்டுமுடன்—சாகாத
தலையறிதல்வேண்டுந்தனியருளாலுண்மை
நிலையடைதல்வேண்டும்நிலத்து.

திருமந்திரம்.

காலுந்தலையுமறியார்கலதிகள்
காலந்தசத்தியருளென்பர்காரணம்
பாலொன்றுஞானமேபண்பார்தலையுயிர்
காலந்தஞானத்தைக்காட்டவீடாகுமே.

## அதிகாரி.

இருக்கு, யஜுர், சாமம், அதர்வணமென்னு நான்கு வேதங்கள் முடிவினும், தந்திர, மந்திர, உபதேச கலைக ளென்னு மாகமங்கள் முடிவினும், பூர்வ உத்தர, பூரவோத் தர, உத்தரோத்தரமாக வழங்குங் கர்மகாண்ட ஞானகாண் டத்துள் கூறும் பரவெளி நடனமாகிய சிற்சபா தரிசனத் தை யிற்றூற் கூறுகின்றமையால் இதற்கு அதிகாரிகள் யோகமாந்தர்கள். மூக்குற்றங்கள் கிரப்பிய மோகமாந்தர்க ளனதிகாரிகள். மூக்குற்றங்களாவன: காமம், வெகுளி, மய

க்கம் என்பன. யோகமாந்தர்கள்சித்தபூமிகளில்உழலல் உற க்க நிலையற்று நிருத்தம், ஏகாக்கிரமென்னும் தன்னிலையும் ஒருவழி நிலையுமுடையவர்கள். வாழையினிடத்து அக்கி செல்லாததுபோல மோகமாந்தர்தட்கு இது விளங்காதாத லால் அவர்கள் அநுதிகாரிகள். காய்ந்த கட்டையினிடத்து அதிசீக்கிரம் அக்கி பற்றுவதுபோல அதிதீவிர பக்குவமு டைய யோகமாந்தர்கட்கு நன்குவிளங்குவதால் அவர்கள் அதிகாரிகளாவர்.

திருவருட்பா

ஆகமாந்தமூவேதத்தினந்தமுமறையும
பாகமாம்பரவெளிநடம்பரவுவீருலகீர்
மோகமாந்தருக்குரைத்திலேனிது நகமுஞ்னும்
யோகமாந்தர்க்குக்காலமுண்டாகவுரைத்தேன்.

திருமந்திரம்.

மூன்றுளகுற்றம்முழுதுநலிவன
மான்றிருடேங்கிமயங்கிக்கிடந்தன
மூன்றினைநீங்கியேநீங்கினர்நீங்காதார்
மூன்றினுட்பட்டுமுடிநின்றவாறே.

ஷடாந்தம் (எ-து) வேதாந்த, சித்தாந்த, நாதாந்த யோகாந்த, போதாந்த, காலாந்தம்.

சமரசவேதம் (எ-து) அந்தவாறினும் நீக்கமின்றி நிற்ற லெதுவோ அதுவே சிவம் பிரமமெனும் அறிவு. அதனைத் தெரிவிப்பதே சமரசவேதமாம்.

சுத்தம் (எ-து) ஒன்றுமல்லாதது எல்லாமுடையது.

சன்மார்க்கம் (எ - து) சத்-மார்க்கம் சத்தென்னும் பொருளினுண்மையை தெரிவிக்கும் வழி.

திருவருட்பா.

தத்துவத்துட்புறந்தாளும்பொதுவிற்
சத்தாந்திருநடநான்காணல்வேண்டும்
கொத்தறுவித்தைகுறிப்பாயோதோழி
குறியாதுலகில்வெறிப்பாயோதோழி.

என்றபடி சத்-சர்வசொரூபத்தன்மையுடைய திருநடனம், சத்பிரமம், அக்ஷரம், அவ்வியாகிருதம் ஆன்மா என்னுமிவை ஒருபொருள்குறித்த சொற்கள்.

பிரமம் - இன்பவடிவமானது.

ஆன்மா - சொரூபவாசகமானது.

அக்ஷரம் - என்றுமொருதகைத்தாய் அநுபவ வடிவமாயிருபது. க்ஷரம் (நாச) மற்றது.

அவ்வியாகிருதம் (எ-து) வியாகிருதமென்பது உலகந் தோற்றுவதற்குத் தகுதியான தூலதசையைக்குறிக்கின்றது அ என்னும் எதிர்மறை உபசருக்கத்தால் நுண்ணிய காலத்தை குறிக்கின்றது. ஒரு பொருளுடைய ஸ்தூலத்துக்கும்

தசைகளைச் சுகம் பிரமம் என்னும் மொழிகளால் கூறப்படு கின்றன. ஆதலால் சத்பிரமம் அக்ஷரம அவ்வியாகிருதம் ஆன்மா ஆக ஐந்து மொழிகட்கும் ஒரே பொருள் என் றுணர்க.

சத்என்பதுபற்றி சாமவேதசாந்தோக்கிய உபநிஷத்து சிருட்டிக்குமுன் ஆன்மா ஒருவனாகிச் சத்ரூபமாயிருந்தான், பலவாகப பிறக்கின்றவனாகின்றேனெனச் சங்கற்பித்தான், பின்பு தேஜஸ்—ஒளியையுடைய தீயைப்படைத்தான், தீயி னின்றும் உருவமுடைய பொறிகள் அநேகமாய் எவ்வாறு வெளிப்படுகின்றனவோ அவ்வாறே ஆன்மாவினின்று ஜீவர் கள் பிறக்கின்றார்கள் என்று கூறுவதறிக.

### திராவிடப்பா.

பரமதனோடுல குயிர்கள் கற்பனையே யெல்லாம் பகர் சிவமேயென வுணர்ந்தோமாதலினால் நாமே, பிரமமெனப் பிறர்க்குரைத்துப் பொங்கிவழிந்தாங்கே பேசுகின்றபெரிய வர்தம் பெரியமதம் பிடியேல், உரமிகுபேருல குயிர்கள் பரமிவை காரியத்தாலுள்ளனவே காரணத்தாலுள்ளன வில்லனவே தருமிகுபேரரு ளொளியாற் சிவமயமே யெல் லாந் தாமெனவேயுணர்வது சன்மார்க்கநெறி பிடியே.

### சமரசம்.

மைத்திரேய சாகை என்னுஞ் சுருதியில் ஆன்மா வின் திறம் கூறப்பட்டிருக்கும் அவை பிரமன்.

விஷ்ணு, உருத்திரன் என்னும்வடிவத்தை யுடையது அறிவு விளக்கமானது அவற்றுள் இராஜதகுணத்தின் கூறு பிரமன். சத்துவகுணத்தின் கூறுவிஷ்ணு, * தமோகுணத்தின் கூறு *ருத்திரன். அச்சிவன் ஒருவனே சிருட்டிதிதி சங்காரத் தொழில்களை அடையும் பொருட்டுப் பெயராலும் தொழிலாலும் பேதமடைகின்றனென்று கூறப்பட்டமையால் சத்தென்னும் பொருளில் ஆன்மா அடங்கியதால் சமரசம்வருவிக்கப்பட்டது. சத்துவகுணத்தின் கூறுவிஷ்ணு என்றதற்குக்காரணம் விஷ்ணு வியாச உருவமடைந்து எல்லாவுயிர்களும் இன்பம் அடையும்பொருட்டு வேதப்பிரிவுகளைச் செய்து சமயமத சன்மார்க்கங்களை விளக்கினமைபற்றியும், காத்தல் தொழிலைப்பற்றியும் அங்ஙனங் கூறற் கிசைந்தது.

திருவருட்பா.

பிரமமென்றுஞ்சிவமென்றும்பேசுகின்றநிலைதான்
பெருநிலையேயிந்நிலையிற்பேதமுண்டோவெனவே
தாமறியவினவுகின்றாய்தோழியிதுகேணீ
சமரசசன்மார்க்கநிலைசார்தியெனிலறிவாய்
திரமுறவாயினுமெல்லாமாகியல்லாதாகுந்
திருவருளாம்வெளிவிளங்கவிளங்குதனிப்பொருளாஞ்
சிரமுறுமோர்பொதுவுண்மைச்சிவம்பிரமமுடியே
திகழ்மறையாகமம்புகலுந்திறனிதுகண்டறியே.

---

* தமோகுணமென்றது அவ்வுருத்திரன் தொழிலை நோக்கியாம்.

* ஈண்டு உருத்திரனென்றது குணருத்திரனை.

## சுத்தம்.

சத்ரூபமும், ஞானவடிவமும் முடிவற்றதும் பலமுனைகளையுடைய மஹா மாயையோடுங்கூடி வேறுபட்டிருப்பதும் ஞானம் பலம் தொழிலென்னு மியற்கை யிலக்கணங்களையுமுடையது. சுத்தம். அச்சுத்தத்தில் ஆன்மாவும் ஆன்மாவில் ஆகாயமும் ஆகாயத்தில் வாயுவும் வாயுவில் தீயும் தீயில் நீரும் நீரில் மண்ணும், மண்ணில் பைங்கூழும், பைங்கூழில் அந்நமும், அந்நத்தில் புருடனும் * பிறந்தன. புருடன் என்ற வாக்கியத்தால் அது கைகால் முதலிய அவயவங்களோடுகூடியிருக்குந் தனுகரணங்கள் பிறப்பதற்கு ஏதுவாயது. அத்தனுகரணங்கள் பிரமன்முதல் ஸ்தம்பம் வரையிலுள்ளன. அவற்றுள் ஸ்தம்பம் நுண்ணியதோர் ஜந்து. பிரமன் நித்தியத்துவமுடையவன். நித்திய பிரமன் தோன்றுவதற்கு காரணம் வேண்டாதாயினும் அநித்தியமான உடம்பு பிறப்பதற்கு காரணம் வேண்டுமாதலின் இரணியகருப்பன், விராட்புருடன், ஈசுரன், சதுமுகட்பிரமன் முதலாயினோர் காரணமாயினரென்னு முண்மைகளை தெரிவிக்கு நிமித்தம் சுத்தம் வருவிக்கப்பட்டது.

## சன்மார்கம்.

இச்சன்மார்க்கம்மூவகைப்படும் அவை சமயசன்மார்க்கம், மதசன்மார்க்கம், சுத்த சன்மார்க்கம் என்பன.

சமயசன்மார்கம். (எ-து.) சத்துவகுணத்தின் வாச்சியார்த்தத்தை இலட்சியஞ்செய்வது அதாவது சத்[illegible]

* இம்முறையே [illegible]

சத்பாத்திரம், கொல்லாமை, பொறுமை, ஜீவகாருண்ணிய, ஈசுரபத்தி முதலியவைகளாம.

திருவருட்பா.

உய்வதாமிதுநங்குருவாணையொன்றுரைப்பேன்
சைவமாதிசித்தாந்தத்தும்மறைமுடித்தலத்தும்
சைவதின்றியாங்கதுகதுவாயது நமது
தெய்வமாகிய சிவபரம்பொருளெனத்தெளிவீர்.

இதுவுமது.

கிழக்குவெளுத்தது கருணை யருட்சோதியுதயங்கிடைத்த தெனதுளக்கமலங் கிளர்ந்தெனதகத்தே, சழக்குவெளுத்தது சாதியாச்சிரமாசாரஞ் சமய மதாசாரமெனச் சண்டையிட்டகலக, வழக்குவெளுத்தது பலவாம் பொய்ந்நூல் கற்றவர் தமமனம் வெளுத்தவாய் வெளுத்து வாயுறவாதித்த, முழக்குவெளுத்தது சிவமே பொருளெனுஞ் சன்மார்க்கமுழுநெறியிற் பரநாத முரசு முழங்கியதே.

திருமந்திரம்.

உள்ளம்பெருங்கோயிலூனுடம்பாலயம்
வள்ளற்பிரானார்க்குவாய்கோபுரவாசற்
றெள்ளத்தெளிந்தார்க்குச்சீவன்சிவலிங்கங்
கள்ளப்புலனைந்துங்காளாமணிவிளக்கே.

மேற்கூறிய பாக்களிற் குறித்த சிவபஞ்சாட்சர ஞாபகஞ் செய்தல்வேண்டும்.

சி என்பதன் பொருள் பீஜாட்சரம் ஒ.

அவையாவன. விந்து, நாதம், சகரமொற்று, அகரம், இகரம், ஆக ரு-ங்கூடிய ஓர் உருவமாகிய சி.

சிவ என்பதில் சி அறுதியாய் மலமில்லாதது, வ-சர்வ வல்லபமுடையது.

சிவம் (எ-து) முற்றும் மலம் நீங்கியது. எங்ஙனமெனில், பசு - ஆன்மா - சிவம். பசு - முற்றுமலமுடையது, ஆன்மா-ஒருபங்கு மலமுடையது, சிவம் - முற்றும் மலம் நீங்கியது. ஆகலின் மலமுற்றும் நீங்கித் தயாவடிவமாவதே சிவம்.

இச்சிவமே சச்சிதாநந்தம், அஃதாவது சி-சத்து, எல்லாமுடையதாய் விளங்குவது. வ-சித்து, எல்லாம்விளங்குவதாயுள்ளது.

ம்-ஆனந்தம். இவ்விரண்டிலும் நிரம்பிய இன்பம், சிவ பஞ்சாட்சர அனுட்டானம்.

கிழக்கு - முகம், மேற்கு-கால், வடக்கு - வலக்கை, தெற்கு - இடக்கை. கொப்பூழ்-கொடிமரம், கொடிமரத்தினளவு-உள்நாக்கு, வயற்றின் மேடு-பலிபீடம், ஆணவமலமாகிய பசு-நந்தி, மூலாதாரத்திலுள்ளங்கமே சிவலிங்கம், வாய்-கோபுரவாயில், சிரசு - சுவர்க்கம், காது - திக்குகள், கண்கள்-சூரிய சந்திரர்கள், நெற்றி-அக்கி, ஆன்ம அறிவு பிரகாசமுடையது, இடைபிங்கலை-கங்கை யமுனை நினைப்பு மறப்பு, புருவநடு - நெற்றிக்கண், திரிவேணி, -திரிகூடம் - ஞானயோகநீராடல் ஆன்மநிலையுமான புருவமத்தியில்

ஆன்ம அறிவு என்கிற கர்ப்பூரத்தில் கடவுள் அருள் என்கிற தீபம் விளங்குவதாகப் பாவித்துப்பார்த்து அதில் பழஇக் கடவுளிடத்தே உண்மையாகிய அன்பையும், ஜீவர்களிடத்தே உண்மையாகிய காருண்யத்தையும் இடைவிடாமல் வைத்து ஓங்கார பஞ்சாட்சர ஞாபகம் சிவபஞ்சாட்சர ஞாபகஞ்செய்தலே சத்துவகுணத்தின் வாச்சியார்த்தத்தை இலட்சியஞ்செய்தல இது சமயசன்மார்க்க முடிபு.

---

## பிரமவித்தை.

### மதசனமார்க்கம்.

திருவருட்பா

“சரியை நிலைநான்குமொருகிரியை நிலைநான் குந் தனியோக நிலைநான்குந் தனித்தனி கண்டறிந்தேன், உரிய சிவஞான நிலைநான்கு மருளொளியாலொன் றென்றுவறிந் தேன் மேலுண்மை நிலைபெற்றேன், அரிய சிவ சித்தாந்த வேதாந்த முதலாமறந்த நிலையறிந்தேனப்பால் நின்றோங் கும், பெரிய சிவ வனுபவத்தாற் சமரச சன்மார்க்கம் பெற் றேனிங்கிறவாமை யுற்றேன்காண் டோழி” :—என்றபடி.

மத சன்மார்க்கம் (எ-து.) சத்துவகுணத்தின் இலட் யார்த்தத்தையும் அதன் விளைவையுங் கொள்வது அது சோகவ, சிவோகம் நான் அவன் அவன் நான் என்னும் அநுபவம். அஃதாவது சத்துவகுணத்திற்கு மார்க்கம்

## திருவருட்பா.

"புடையுறுசித்தியின்பொருட்டே முத்தியை அடைவதென் றருளிய வருட்பெருஞ்ஜோதி" "முத்தியென்பது நிலைமுன் னுறுசாதன, மத்தகமென்றவென்னருட் பெருஞ் ஜோதி" "சித்தியென் பதுநிலைசேர்ந்தவனுபவமத்திறமென்றவென்னருட் பெருஞ்ஜோதி"

முத்தி எ-து சாதனம், சித்தி எ-து அநுபவம், முத்தியென் னுஞ்சாதனங்கள் வேண்டியவிசாரஞ் செய்யவும்.

## விசாரம்.

சாரம் எ-து துக்கம், வி எ-து உலக துக்கத்தை மறுத்தது. பரத்தைக்குறிக்கும் பொருட்டுவந்தது. அவ்விசாரம் பரம்- அபரம் எனஇருவகை- பரம்- முன், அபரம்-பின். முன்- சாத்திரஞானம், வாச்சியார்த்தம் சாதனம். பின்- அநுபவஞானம் இலட்சியார்த்தம் சாத்தியம்.

## சிருட்டி விசாரம்.

சாமானியவிசேடணைத்தால் அணுபட்க்ஷபரமாணு பட்க்ஷ சம்புபட்க்ஷ, விபுபட்க்ஷ பிரகிருதிபட்க்ஷ மென்னுஞ் சிருட்டிவகைகளில், சாதாரணஅணுபட்க்ஷத்தில் ஆன்மாகாரணசாமானியமும், ஜீவகாரிய விசேடமுமாகிய பூர்வமென்னும் லிங்கஸ்தானத்தில் உத்தரமென்னும் விந்துவின் அபக்குவ மாயா சிருட்டியா லுதித்த தனுகரணங்க ளாதலின் மாயையென்னும் மலங்களால் ஆன்மப் பிரகாசத்தைத்தெ

ரிய வொட்டாமல் மறைத்திருக்கின்றதை ஜலத்திலிருக்கிற பாசியை நீக்குவதுபோல் விசாரணையால் நீக்கவேண்டும். முதலில் சன்மார்க்கத்தில் எட்டு இரண்டு ஆகியபத்து. அது அகர உகரமாயது. அதுபூதம் எனவெளிப்பட்டது. பூ- மலர்ந்தது பிரகாசம், த- தடித்தது காரியம், ம- ஊன்றியது நிலை, எனவே நிலைபெற்ற காரிய அக்நிபிரகாசத்தை யுடையது. அது யகரமென்னும் பத்துப் பொதுஸ்தானங்களாகச் சொல்லப்பட்டது. அவையாவனபிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், பிரகிருதி, மாயை, சூரியன், சந்திரன், அக்னி ஆகபத்து- இவைகளின் சொரூப, ரூப, சுபாவ, வியாபக, வியாத்தி, விசேட, சாமானிய முதலியவைகளே வாச்சிய இலட்சியமாக அறிதல் வேண்டும். அதுசுத்தத்திலடங்கியது.

## சுத்தம்.

ஓருசமயபந்தமுமற்றது. அங்ஙனமாயினும் அதுசால்லாமுடையதாம். பாவம அபாவம் என்னும் வேறுபாட்டால் பதார்த்தம் இருவகைத்தாம். பிராக்பாவம் பிரத்தும்ஸாபாவம் அத்தியந்தாபாவம் அந்நியோந்நியாபாவ மென்னு நான்கனுள் பிராக்பாவம் பிரத்தும்ஸாபாவம் என்னும் இரண்டும்காரியத்திற்குமுன்உள்ளதும் காரியத்திற்குப்பின் இல்லதுமாம்.

## சாமானிய சாதாரண காரணசிருட்டி-

அச்சுத்தம் அவ்வியத்தமாய் (வியத்தம்- வெளிப்படல் அவ்வியத்தம்-வெளிப்படாமை)பரமாணு, துவியணுக திரிய

னுகரூபமாய்ப் பரமாணுக்கட்குக் காரணமாயின அதிலொன் றிலொன்று வெளிப்பட்டது. அவையாவன ப்ரகிருதி அவ்வியா கிருதம் இரணியகருப்பம், விராட், ஆகாயம், வாயு, தேயு ப்ரிதிவி அப்பு இவைகள் சூக்ஷ்மமும் வியாபகமும் ஒன் றிற் கொன்று காரணமுமாம்

## விசேடஅசாதாரணகாரண லயம்.

சுருதி ஸ்மிருதிகளில் கூறியபடி பிரளயத்தில் உருத்தி ரர்கள் இலயத்தை அடைந்தபின் ப்ரிதிவி பூதங்களையெல் லாக்குணத்தோடும்நீரிலொடுங்கும், அந்நீரை அதன் குணத தோடு அக்கி உண்டுவிடும், அந்தஅக்கினியைத் தன்னுடைய குணத் தோடு வாயுவில் முடிவை அடையும். அவ்வாயு ஆகாயத்தில டங்கும். அவ்வாகாயந்தன்குணத்தோடு பூதாதியென்னும அகங்காரதத்துவத்தி லொடுங்கும். வைகாரிகம், தைசதம், பூதா தியென) மூவகைப்பட்ட அகங்காரதத்துவங்கள் மகத்து வத்திலொடுங்கும் இம்மகத்துவம் மூலப்பகுதியிலொடுங் கும் *இவைஸ்தூலமும்பரிச்சின்னமுங்காரியமுமாம் இவை காரண வகையில்அணுவெனவுங் காரியவகையில்மகத்தென வுங் கூறப்படும், சந்திரன், சூரியன், அக்நி, காலம், திக்கு, ஆன்மா, மனமென்னு மிவ்வேழின் இலக்கணமினையவெனக் கூறப்படுகின்றது.

---

* பஞ்சபூதமும் தன்மாத்திரையி லொடுங்கு மென்பதி னும் தடையில்லை.

## சந்திரன்-

ரூபி, காரியகாரணரோபாணமாத்திரன், நடாத்தன்மை, பன்னிரண்டுகலை, அர்க்கவடிவன், பிரமாண்ட பகிரண்ட வியாபகி, பச்சைவெண்மை கலைகமேனி.

## சூரியன்.

ரூபி, காரியன், ஜ்வலிமாத்திரன், நட்டுந்நடாத்தன்மை பதிமூன்றுகலை, வட்டவடிவன், பிரமாண்டவியாபகி, பச்சை வர்ணன்.

## அக்கி-

அரூபி. காரணன் பிரகாசமாத்திரன், சுடுந்தன்மை அறுபத்துநான்குகலை, வடிவன், பஞ்சுருமவியாபகி, சொரோன.

## காலம்.

ஆனது ஆகின்றது ஆவது என்னுஞ் சொல்லின் பிரயோகத்திற்கும் தோற்ற ஒடுக்கமுடைய பொருள்கட்குங் காரணமாய் எப்போதுமென்னும்வினையினால் இறந்தகால நிகழ்கால எதிர்கால மென்னுங்காலம் பிரளயத்தில் நித்தியமாகக் கொண்டமையின் விபுவெனக்கூறப் பட்டது. விபு எ-து எல்லாவுருவப்பொருளோடுங் கூட்டமுடையது. அவை மண், நீர், காற்று, மனம் என்பனவாம்இவற்றைக்கற்பமஹாகற்ப அவாந்தரகற் பங்களில் குறிப்பித்தவாறுணர்க.

## திக்கு.

திக்கென்பது பிரகாசத்தை நிமித்தகாரணத்தாலுணர்த்தலின் சன்மார்க்கத்திற் பொருளாகக் கொள்ளப்பட்டது. அஃதாவது வடக்கு கால் நட்சத்திரப் பிரகாசம் சித்தசத்திகளைப் பெறுவதற்கும், மேற்கு த்தலைசந்திரப்பிரகாசம்யோகசித்திகளைப் பெறுகிறதற்கும், கிழக்கு கால் சூரியபிரகாசம் சொர்ணசித்திகளைப்பெறுகிறதற்கும், தெற்கு தலை அக்கினிபிரகாசம் சாகாக்கால் அநுபவங்களைப்பெறுகிறதற்கும் ஏதுவாதலாம்.

## ஆன்மா

அது பரமான்மா, ஜீவான்மா வெனவிருவகைத்து. பரமான்மா சச்சிதானந்தவிலக்கணமும் ஜீவான்மா அசத்தாதியிலக்கணமு முடையது. நால் உடலில் இதைய முதலிய ஸ்தானங்களில் பிராணனென்னும் ஐவகைத்தொழிலுடைய தோர்காற்றின் விசேடமாகிய மூச்சுமேலெழுதல் கீழ்நோக்குதல், உணவின் தூலபாகத்தைக்கீழ்த்தள்ளிச் சூக்குமபாகத்தைஅவயவங்களில்விரவச்செய்தல்உண்டதைக்கக்கவும்கீழ்நோக்கவும் நாடிகளில்பந்திக்கவும்செய்தலாகியதொழிற்குக் காரணமாயது. இப்பிராணன் ஜீவான்மாக்களின் இயக்கத்திற்கு ஏதுவாயிருப்பது. இச்சீவ தேகங்கள் லலாடஸ் தானத்தில் மேற்குறித்த ஆன்மா கோடி சூரியப் பிரகாசத்தையுடையவனாவன்.

## மனம்

சூக்ஷும பூதங்களில் சத்துவகுண சம்பாகத்தாலுதித்தபடித்தநினைப்புமறப்பிற்கு ஆதாரமாயவிந்திரியமாய்ப்பாயு தத்துவங்களியங்குவதற்குக் காரணமுமாம். இது அக்நியின் சூரியபாகத்திலுண்டாகும் காற்றிலசைக்கப்படும் போது நினைப்பையும் அக்நியின் சந்திரபாகத்திலுண்டாகும் காற்றிலசைக்கப்படும் போது மறப்பையுமடையும்.

## வேதாந்த சித்தாந்த விசாரம்.

திருவருட்பா-

"ஆறுகோடியாருசமயங்களகத்திலுமமைமேல்
வீறுசேர்ந்தசித்தாந்த வேதாந்த நாதாந்த
தேறுமற்றைய வந்தத்துஞ் சிவமொன்றேயனறி
வேறுகண்டிலேன்கண்டீரோர்பெரியர்காள்விளம்பீர்."

திருமந்திரம்.

சோடசமார்க்கமுஞ்சொல்லுஞ் சன்மார்க்கிகட்
காடிய வீராறி னந்தமீ ரேழிற்
கூடிய வந்தமுங் கோதண்ட முங்கடந்
தேறியே ஞானஞேயாந்தத் திருக்கவே.

தானான வேதாந்தந்தானென்னுஞ் சித்தாந்த
மானதுரியத் தனுவன் றனைக்கண்டு
தேனார் பராபரஞ்சேர்சிவ யோகமா
யானா மலமற் றருஞ்சித்தி யாதலே."

என்னும் பாக்களிற் குறிப்பித்தபடி சிவமே அருள் ஆன்மா திரோதை மாமாயை முதலிய பாகு பாட்டினைத் தெரியவொட்டாமல் மறைத்தது ஆணவம். ஆதி பரை இச்சைகிரியை ஞானசத்திகளாலும், தன்மை முன்னிலை படர்கையா யுள்ள திருவருளே திருமேனியாக வெழுந்தருளிய பரமாசாரியராலும், வேதாகமங்களாலும் முதல்துணை நிமித்தமென்னும் காரணத்தாலும் சையோக சமவாய முதலிய சம்பந்தங்களாலும் அவற்றை அளந்தறிதல்வேண்டும். முதல் துணை நிமித்தமென்னுங்காரணத்தால் நூலானது படமும் மண்ணானது கடமுமானாற்போல் - முதற்காரண மாய மாமாயையினின்றுந் துணைக்காரணமாகிய கிரியாசத்தியால் தனுகரண புவனபோகங்கள் நிமித்தகாரணனான சிவனால் வெளிப்பட்டன. நிமித்தகாரணனான சிவமேபதி.

அப்பதியினது அருட்சத்தியால் ஆன்மாக்கள் பந்தம் முத்தி யிரண்டையுமனுபவிக்கின்றன. ஆன்மாக்கள் பந்தத்தசையில் தத்துவங்கள் முப்பத்தாறனோடுங்கூடி இச்சாஞான க்கிரியைகளால்சுழலுவதும்முத்திதசையில் விடயவாசனையி ன்றிநிற்பதுமாம்:—ஆன்மா சித்து. தத்துவஞ்சடம். சித்தாகிய ஆன்மாசடமாகியதத்துவத்தைத்திருவருளால்தனக்குவே றென்று பகுத்தறிதலால் பந்தத்தினின்றும் நீங்கும் நீங்கவே தன்னையறியப்பட்டது. சடம் தனக்கறி வித்ததருள் என்றுணரும்.

சிவம்— கடல் போல்வது வியாபகமாம்,
ஆன்மா— அதனுள் நீர்போல்வது வியாத்தியாம்,

ஆணவம்-அந்நீருக் குள்ளிருக்குமட்டுப்போல்வியாபியமாம்,
கன்மம்— அந்நீரில் விசுங்காற்றுப் போல்வதாம்.

மகாவாக்கியம்.

திருவருட்பா "தொம்பத வுருவொடு தற்பதவெளி யிற் றோன்றசி பதநான் காணல் வேண்டும், சம்பத மாகி யிசைவாயோ தோழி, யிசையாமல் வீணிலே யசைவாயோ தோழி.

திருமந்திரம்

"தொம்பத மாயையுட் டோன்றிடுந் தற்பதம்
மப்பரை தன்னி லுதிக்கு மசிபத
நம்புஞ் சாந்தியி னண்ணுமவ் வாக்கிய
மும்பருரை தொந்தத் தசிவா சியமே.

என்னும் பாக்களிற் குறிப்பித்தவாறு மாயை அல் லதுபரிக்கிரக சத்தியில் தோன்றியது தொம்பத மெனவும், பரையிலுதித்தது தத்பதமெனவுஞ் சாந்தியில் நின்றதசிபத மெனவும் பெறப்பட்டன. மகாவாக்கியத்தின்வாச்சியலட் சியங்களை அவ்வருளே திருமேனியாகவெழுந்தருளிய பரமா சாரியர் தசகாரியமாய் உபதேசித்தல் வருமாறு.

திருவருட்பா-

"உயிரநுபவமுற்றிடி லதனிடத்தே யோங்கருளநுப வமுறுமச், செயிரி னல்லநுபவத்திலே சுத்தசிவ வநுபவ முறுமென்றாய், பயிலுமூவாண்டிற் சிவைதரு ஞானப்பால்

மகிழ்ந்துண்டு மெய்ந்நெறியாம், பயிர்தழைய துறவைத் தருளிய ஞானபந்தனென் றேங்குராற் குருவே.

திருமந்திரம்.

ஓதியமுத்தி யடைய வேயுயிர்பாம
பேதமிலாச்சிவ மெய்துந்துரியமோ
டாதிசொரூபச் சொருபத்ததாகவே
யேதமிலாந்ருவாணம்பிறந்ததே.

என்னும் பாக்களிற் குறிப்பித்தபடி நிருவாணந் தசகாரியத்திற்கேதுவாயது மகாவாக்கிய உபதேசமாம். தத்துவரூபம், தத்வதரிசனம், தத்துவசுத்தி, ஆத்மரூபம், ஆத்மதரிசனம், ஆத்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பன தசகாரியமாம்.

தத்துவரூபம்-

பூதமுதல் நாததத்துவமீறு முள்ளனவெல்லாம் நாமல்லவென்றறியும் போதம்.

தத்துவதரிசனம்-

தத்துவம்சடம், சடம் நம்மையறியாதுநாம்சித்துருவென்றறியும் போதம்.

தத்துவசித்தி-

நாம்சித்துரு வென்று தெரியவொட்டாமல்மறைத்த திந்தத்தத்துவ மென்றறியும் போதம்.

மேலாஞ்சிவபோகந்தனி லோறிறையளவென் றுரைக்கின்ற மறையளவின்றறிந்தேன். விண்கலந்ததிருவாளருயிர் கலந்ததருணம், வினைத்துயர்தீர்ந்தனைத்துக் கணத்திடுந் தோறெல்லாம், உண்கலந்தவானந்தப பெரும் போக மப்போதற்றதென வெனைவிழுங்கக் கற்றதுகாண் டோழி:

## கேவலாத்துவிதம்.

## திருவருட்பா.

சுத்தவேதாந்தமவுனமோனத்துசுத்தசித்தாந்தராசியமோ, நித்தநாதாந்த நிலையநுபவமோநிகழ் பிறமுடிபின்மென்முடிபோ, புத்தமுதனைய சமரசத்ததுவோ பொருளியல றிந்திலமெனவே, அத்தகையுணர்ந்தோருரைத்துரைத்தேத்து மருட்பெருஞ் ஜோதியென்னுடேசே,

## திருமந்திரம்.

நூலுஞ்சிகையுமுணரார் நின்மூடாகள்
நூலதுவேதாந்தநுண்சிகை ஞானமாம்
பாலொன்றுமந்தணர் பார்ப்பார்பரமுயி
ரோரொன்றிரண் டினிலோங்கார மோதியே,

அறிவுக்கழிவில்லை யாக்கமுமில்லை
யறிவுக்கறிவல்ல தாதாரமில்லை
யறிவேயறிவை யறிகின்றதென்றிட்
டறைகின்றனமறை யீறுகடாமே,

என்னும்பாக்களிற் குறிப்பித்தவாறுள்ள அறிவு திருக்கெனவும் அறியாமை திரிசிய மெனவுங்கூறப்படும். இறை யெனவும், பிரமமெனவும், தஸ்மாஸ்மை யெனவும், சிவ மெனவுங் கூறப்படும். அப்பிரமத்தினிடத்தில் திரிபதார்த்தம் தமக் கெனவடிவமின்றியிருத்தலின் அவைதோற்றல்மாத் திரமுடையனவாம். ஆகவேபிரமம் சசாதிமுதலியன வின் றியதாம். அவள்றுள் சவகதமென்னும்பிறிதிபல்வேறு அவயவ வடிவமாம், விசாதிகமாகியநடுபிரநதிவி தத்துவ முதல் நாத தத்துவ மீறுபுள்ளவையாம், சசாதிகமாகியமுதல் தன்னைப் போல்மற்றொன்றிருத்தலாம், இப்பேதங்களற்றுச்சாமானிய விசேடனங்கட்கு அதிஷ்டானமாகவும் உபாதானமாகவும். நிர்விகாரமாகவு முள்ளது பிரமமென்றுணர்தல் வேண்டும், அப்பிரமம்சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம் பூரணமென் னுமைந்திலக் கணத்தையுடையதுஇவ்வைந்திலக்கணங்களுக் கு மறுதலை வுள்ளனஅசத்து,சடம், துக்கம், அநித்தம், கண் டமென்பனவாம். சத்துமூன்றும், சீவன், ஈசன், கூடஸ்தன், பிரமம் எனநான்குசித்தும், விடயம், பிரமம், வாசனை, முக் கியம், நிசம், ஆன்மா, அத்துவிதம், வித்தையென வெண்வி தவானந்தமும் பிராக்பாவம், பிரதொம்ஸாபாவம், அன்னி யொன்னியாபாவம், அத்தியந்தபாவமெனு நான்கபாவமும், காலம் தேசம், வஸ்துவெனு மூன்று பரிச்சேதமின்றிய பூரணமென்னும் வியவகாரிகத்தில் விகாரப் படுவனவாம் இவற்றிற் கேதுஅறியாமையாகிய திரிசியமாம். அது பிர மத்தின் கற்பிதசத்தி

சால் பூசமுதல்உலகமிறுவாய்க்கிடந்த நிலைகளைக் காட்டுதலாலும், சொரூபலட்சணத்தால் அச்சிவமேயன்றி யன்னியத்தோன்றிலக்கணை பரிட்சைமுகத்தால் காட்டுதலாலும், சர்வதுக்கநிவர்த்தி பரமானந்தாவாப்தி முதலியவுண்டாகும். இந்நூமத தேசத்தால் சிறப்பு வகையான் வேறுவேறு இலக்கணமுடையதாகக் கூறப்படும் தத்துவமசி மகாவாக்கியத்தின் அர்த்தபேதத்தால் துவித, விசிட்டாத்துவித, அத்துவித சித்தாந்தங்கள் ஏற்பட்டன.

திருவருட்பா.

தோன் துவிதாத் துவிதமாய் விசிட்டாத்துவிதமாய்க் கேவலாத்துவிதமாகிச், சான்றசுத்தாத்துவிதமாய்ச் சித்தாந்தோய்ந்தசமரசாத்துவிதமுமாய்த் தன்னையன்றி, யொன்றுமிலையேயென்றுமிலதாய்யென்றுமுள்ளதாய் நித்தியமுணர்வா யெல்லா மீன்றருளுந்தாயாகித் தந்தையாகியெழிற் குருவாய்த் தெய்வமாயிலங்கு தேவே

திருமந்திரம்.

தொம்பதந்தற்பதந் தோன்றுமசிபத
நம்பியசீவன் பரஞ்சிவனாய்நிற்கு
மம்பதமேலைச் சொரூபமாவாக்கியஞ்
செம்பொருளாண்டருள் சீர்நந்திதானே.

அணுவும்பரமு மசிபதத்தேய்ந்து
கணுவொன்றிலாத சிவமுங்கலந்தா
லிணையறுபால் தேனமுதெனவின்பத்
துணையறுவாயுரை யற்றிடத்தோன்றுமே.

## விசிட்டாத்துவிதம்.

சித்தாகிய சீவான்மாக்களிலும் அசித்தாகியபூத பௌதிகங்களிலும்பரமான்மா கலந்தேகமாயிருக்கிறான். அவனை வழிபடுக-அவனொருவனையொழிய ஏனையவரையும் அவர்பொருளையும் விரும்பாதொழிக எனவும் அநந்தகலியாண குணமுடைய பரவாசுதேவ சமுகத்திற்சீவர்கள் பரவாசுதேவ வடிவமாயிருந்தவனருளாற் பரமானந்தமநுபவிப்பதெனவுங் கூறுவது. விசிட்டம், உபஹிதம், உபலக்ஷிதம் சுத்தம் எனநால்வகையாமெனக்கூறப்படுகிறது.

**விசிட்டம்**— விசேஷணமுடையது. அஃதாவது கூடியது. குடமுடையது நிலமென்புழிக்குடம் நிலத்துடன் கூடியிருத்தலின் அதுவிசிட்டமாம்

**உபகிதம்**— உபாதியுடன் கூடியது. கடாகாயம் என்புழி ஆகாயம் கடோபாதியுடன் கூடியிருத்தலின் அஃது உபகிதமாம்

**உபலக்ஷிதம்**— உபலட்சணத்தாலறியப்படுவது. காகமுடைய வீடென்புழிக்காகம்வீட்டிற்குப லட்சணமாயிருத்தலின் அதுஉபலக்ஷிதமாம்.

**சுத்தம்**—பிறிதொன்றனோடும்சம்பந்தமின்றியதொன்றன் சொரூபம்

அஃதாவது தன்னளவிலுள்ளது- தன்னளவிலுள்ளதெனவே ஒருகாலத்தோடுகூடுதலும், மற்றொருகாலத்தோடு கூடாததும், ஆகாதென்னுஞ் ஞாபகமும் அஞ்ஞாபகமில்லாததொழிதலேசுத்தநிலம். இங்ஙனமேமாயை, அவித்தை அவற்றின் காரியமுதலியவிசேடணங்கள் ஆன்மாவை விசே

பதியினைச்சென்றணுகாப்பசுபாசம்
பதியணுகிற்பசுபாசநிலாவே.

மேற்கூறியபடி பதிபசுபாசம் மூன்றும் அநாதிநித்தியமாம். இவற்றின் உருவம், சொரூபம், சுபாவம், விசேடம், வியாத்தி, வியாபகம், குணம், வன்னம், தரிசனம், சத்திஆகியவற்றால் சோதித்தல்வருமாறு:—பதியினது உருவம் ஆனந்தமெனவும், சொரூபம் இச்சாசத்தி, கிரியாசத்தி, ஞானசத்தியெனவும், இவ்வானந்தத்தையே பரையெனவும், இப்பரையையே அசிபத முக்கியார்த்தமாகிய சிவனைவிட்டு நீங்காத பராசத்தியெனப்படும். பரையின் சுபாவமே பரனுக்கு இச்சாஞானக்கிரியையென்னும் பேதங்களைக்கொடுப்பதுமாம்.இவற்றில் சுத்தமாயையென்பது நின்மலவடிவமாம். இது ஓங்காரமுதலாய் முப்பத்தொரு பேதமாய் விரியும் அவையாவன குண்டலி, பரம், பிரமம், வைந்தவம், மாயேயம் மாயை,விந்து,சிவம், நாதம்,பிரணவம்,பேரொளி, சுத்தவித்தையாதி, தனுகரண புவனபோகமாதி சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி, நிவர்த்திகலையாதி முதலியனவாம். இதன் வியாபகம் வாக்குகளாயும், அக்ஷரங்களாயும், ஆன்மாவிற்கு அறிவித்துநிற்பது. இதன்விசேடம் சகளநிட்களவடிவமாம். பிரம விட்டுணு உருத்திர மகேசுர சதாசிவமெனும் பஞ்சமூர்த்தமாகிய தொழிற்குக் காரணமாம்.

**அசுத்தமாயையாவது**:—நாசமில்லாததாய் சகலசகத்திற்கும் காரணமாய் சடமாய் வியாபகமாய்ப் பரிக்கிரகசத்தி

யாய் ஆன்மாக்களின், தநுகரணபுவனபோகமாய் மலங்களி னொன்றாயிருப்பது.

அநாதிமலத்தால் கட்டுண்ட அநாதி பசுவியாத்தியாகிய சிவனைச்சகல கேவலத்தினின்று நீக்குதலும், இருவினையொப்பு மலபரிபாகம் வாய்க்கப்பெறுதலும் பராபரையென்னும் அருட்சத்தியின் சார்பாலாகுமென்பது சுத்தசித்தாந்தமாம். இச்சுத்தத்தில் சுத்தமே சிவமெனவும், சுத்தத்திற்கேவலம் உபசாந்தம் பெறுதலெனவும், சுத்தசகலந் துரியவிலாசமாத லெனவுங்கூறுவது.

ஆன்மாக்கள் ஆணவமலத்தால் தன்னையும் சிவனையும அறியாது கிடந்தலைக் கருணைமேலிட்டால் சிவன் பஞ்சகிருத்தியலீலைகளை திருவிளையாட்டாகத், தனுகரணபுவனபோகமாக மாயை விரித்து ஆன்மாக்களை மாயாவுடலில் விடுவித்துப்பக்குவம் வருவித்து ஆன்மபிரகாசம் விளங்கவிளக்கியருளும் மெய்ப்பொருளுண்மையைக் காமிகாதி சிவாகமங்களிற் கூறுவதே சுத்தசித்தாந்தமாம்.

வேதாந்த போதாந்த நாதாந்த யோகாந்த கலாந்தமென்னுஞ் ஷடாந்தங்கள் தத்துவநிக்ரக வாயிலாகக் கடவுணிலை முதலிய புருஷார்த்தமடைவதற்கு நிமித்த காரணமாயுள்ளவையாம். இவ்வெல்லா மதசன்மார்க்கத்திற் கூறப்படுவனவாம். இவையனைத்தும் சுத்தசன்மார்கானுபவலேச சித்தி பேதங்களெனவும் கூறுப. இது சத்துவகுணத்தின் இலட்சியார்தத்தாலாயபயன்.

இச்சமய மதசன்மார்க்கத்திலடங்கியது தத்துவாந்த்ர சமூகங் கடவுள்நிலையுமாம். சாகாக்கல்வியும் ஏமசித்தி யுஞ் சுத்தசன்மார்க்கத்தில் கூறப்படும்.

திருவருட்பா.

,, அறங்குலவுதோழியிங்கே நீயுரைத்தவார்த்தையை
யறிவறியார்வார்த்தையெதனாலெனிலிம்மொழிகேள்
உறங்குவதும்விழிப்பதுமின் னுண்ணுவதும்பிரத்த
லுறுவதுடன்பிறத்தல்பலபெறுவதுமாயுழலும்
மறங்குலவுமனுக்கள்பலர்செய்தவிரதத்தால்
மதத்தலைமைபதத்தலைமைவாய்த்தவரங்கவர்பால்
இறங்கலிலென்பேசுதலாலென்பயனோநடஞ்செய்
யிறைவரடிபுகழ்பேசியிருக்கின்றேன்யானே.''

என்று கூறுவதறிக

சுத்தசன்மார்க்கம்.

திருவருட்பா.

'' சுத்தபரமுதல்நான்கு மவற்றுறுநன் னான்குந்தூய வொளிவடிவாகத்துலங்குமொளியளித்தே, நித்தபரம்பரநடு வாய்முதலாயந்தமாய் நீடியவோர் பெருநிலைமேலாடியபே ரொளியே, வித்தமுறுஞ்சுத்தபரலோகாண்டமனைத்தும்விள க்கமுறச்சுடர்பரப்பி விளங்குகின்றசுடரே, சத்தியஞானா நந்தசித்தர்புகழ்பொதுவில் தனித்தநடத்தரசேயென் சாற்று மணிந்தருளே :—

அக்கிப்ரகாசமத்தியில்கடவுளின்காரியமாய் அதிதூரத்திலிரு க்கிற விருளாகிய மெய்ஞ்ஞாதிகளைப்போக்கி ஆன்மஅநுபவ த்தை வருவிப்பதாம். ஜீவர்க ளிருளில் மயக்கமுற்றிருந்து விளக்கொளிகண்ட வக்கணமே வதன்மய மாவதுபோல் கடவுளின் சோபையைக் கண்டவுடன் பஞ்சகிருத்தியங்க ளுஞ்செய்ய அதிகாரிகளாவார் என்பது சுத்தசன்மார்க்க வாச்சியார்த்தம்.

கடவுள் பிரகாசமெங்கு முள்ளதா லெந்த விடத்தில ஜீவர்கள் கொலைபுலை விடுத்து விசாரஞ் செய்கிறார்களோ அந்தவிடத்தில் கடவுள் அவரதாகாரண வுருவமாகிய பிரகா சத்தில் நின்று காரியவுருவமாகிய ஒளிவடிவாய்த் தோன்றி யனுக்கிரகிப்பது சுபாவம் என்பது சுத்தசன்மார்க்க லட்சி யார்த்தம். இதற்குப் பிரமாணம் துருசுன்னத்தை மஞ்ச ளில் நனைத்து அதிக நீளமுள்ள நூலை மேற்படிசுன்னத்தி லொரு முனையைக்காட்ட நூன்முழுவதும் சிகப்பாய் விடு வதுபோலாம். இச்சுத்தசன்மார்க்கம் மூவகையாம். அவை பூர்வம், உத்தரம், பூர்வஉத்தரோத்தரங்கள்

பூர்வம்—தலை பூர்வ சம்பந்தத்தால் பெற்ற பெயர அது பூர்வஞானமெனும் நெற்றிக்கண்ணால் பார்த்தல்.

உத்தரம்—கால் புருவ நடுக்கண்ணால் பார்த்தல் அது நெ ற்றியின் மத்தியிலிருப்பது.

பூர்வம்—சிருட்டி, திதி, சம்மாரம் திரோபவம், அநுக்கிரக மென்னும் பஞ்சகிருத்தியங்கட்குங் கர்த்

சாவாக வழங்கிவருகிற பிரமா, விஷ்ணு, ருத்திரன் மயேசுரன், சதாசிவனென்னுந் தத்துவங்களில் சிருஷ்டியில் திதி, சிருட்டியில்சம்மாரம், சிருஷ்டியில் திரோபவம், சிருட்டியில் அநுக்கிரகம் என ஐந்தைந்தாக விரிந்த தத்துவம் இருபத்தைந்தாம். அவற்றை அறுபத்துநாலாயிரத்தில் பெருக்கிய காலமெவ்வளவோ அவ்வளவு காலபரியந்தம் சுத்ததேகிமகா சதாசிவாநுபவத்தைப் பெற்றிருப்பர். சுத்ததேகியாக விருக்கும வருஷத்தொகை மொத்தம் ஒருகோடி அறுபதுலட்சமாம். இச்சுத்ததேகியால் குறிக்கப்பட்டமார்க்கம் சுத்தமாம்.

உத்தரம்-சத்மார்க்கம். சத்தென்பதன் பரிபாஷைப் பொருள் அங், சிங், வங், பங், அம, விந்து, நாதம, சிவ, வசி, ஓம், ஹரி, ஹர, சத்து, சித்து, ஆனந்தம நித்தியம், பூரணம், ஏகம், பரப்பிரமம் நிதானம், சாந்தம், சத்தியம்; ஜோதி, சிவாய சிவாயநம, நமசிவய, ஆ, ஈ ஊ, ஐ, நாராயணாயநம:, சிவோகம், சோகம், முதலிய சமய மதங்களில் குறிக்கப்பட்ட மந்தர தந்தர இரகசிய, வாசக வாக்கிய, வசன, அக்ஷரதத்துவ முதலியவைகளாம் இவைசுத்தத்தின் வாச்சியார்த்தம்.

பூர்வ உத்தரோத்தரங்கள். பாவனாதீதம், குணாதீதம், வாச்சியாதீதம் இலட்சியாதீதம் என்பனவாம். இவைசுத்தத்தின் லட்சியார்த்தம். அவையிந்து ஆன்மா, நாதம் பரமாத்மாவாம் நாதத்தோடு விந்துசேர்ந்தால்

மிவற்றினது விகற்பமெல்லாம் தனித்தனிநின் றிலங்கநிலைபுரிந்தே, விண்ணென்னும்படியவற்றிற்கலந்துகலவாதுவிளையாடுமடிப்பெருமைவிளம்புவதார்தோழி.

“விண்ணிடத்தமுதென்முப்பூவிரிய வதிலொருபூவிரியவதின்மற்றொருபூவிரிந்திடவிவ்வைம்பூக், கண்ணிடத்தேபிறிதொருபூ கண்மலரவதிலேகட்டவிழ வேறொருபூவிட்டவெழுபூவும், பெண்ணிடத்தேநான்காகியாணிடத்தேமூன்றாய்ப்பிரிவிலவாய்ப் பிரிவுளவாய்ப பிறங்கியுடல்கரணம், நண்ணிடத்தேர்ந்தியற்றியதில் நடுநின்றுவிளங்கும் நல்லதிருவடிப்பெருமை சொல்லுவதார்தோழி.

விண்-சிதாசத்தில்முதலில் சிற்சபை, பொற்சபை, சுத்தஞானசபையெனுமூன்று பூவிரிய அவற்றின்பிரகாசத்தால ஷடாந்தவநுபவத்தை அசாதாரணகாரணமாகவுடைய சமபுவிபு பட்சங்களின் பக்கதருமசிருட்டிகளால் மற்றொருபூவிரிந்தது. அதுகாரிய அக்நி பிரகாசமாம். இப்பிரகாசத்தால் அண்டத்தில் சோமசூரிய அக்நிபிரகாசமுண்டாயின. பிண்டத்தில் மனம் ஜீவன் ஆன்ம ஒளியின் சையோகமுண்டாயிற்று அதுசாமானிய சம்பந்தமுற்றுச் சப்ததாதுவாய்ச் சிருட்டிக்குக்காரணமாயது. இச்சிருட்டி சாமானிய விசேடணத்தாற் றாலதேகங்கட்கு எலும்பு, மச்சை, இரத்தம், தோல், மாம்சம், மேதை, சுக்கிலம் என்னுந் தாதுக்கள் பெண்ணிடத்தேநான்காகி ஆணிடத்தேமூன்றாய் பெண்பாகத்தில்கலைநான்கு ஆண்பாகத்தில் கலைமூன்று ஆகஏழுங்கூடி (அஃதா

வது பெண்ணிடத்தில்நான்கு பிருதுவி, அப்பு, தேயு, வாயு வென்னுஞ் சூரிய சந்திர அக்கி இயமானனென்னு மூவி ரோடு சேர்ந்து சுரோணிதமாய்; ஆணிடத்தில் ஆகாசம், பிரகிருதி, ஆன்மவுணர்ச்சி ஆகமூன்றும் ஒருமித்துச் சுக்கில மாய் அறிவு சத்தி வித்து என்னும் பாகத்தோடு சடித்து ஓர்மணியா) யிருத்தல். இது ஆன்மா, சீவன், கரணம், இந்தி ரியங்களோடு சையோகசம்பந்தமாய், பிரமாதா, பிரமாணம் பிரமிதி, பிரமேயமென்னும் பிரமசகூடஸ்த சீவசேதனங் களை வியாபகவிளக்கத்தாற் கூட்டியும்பிரித்தும் நடுநின்றும் விளங்கும். ஆதலின் நடத்த சொரூபலட்சணங்களை உரைத் தற்கும் கேட்பதற்கும் எழுதுதற்கும் ஒண்ணுதென்பது சுத்தசன்மார்க்க பூர்வஉத்தரோத்தரங்கள்:—

சமவாயசம்பந்தசமரசம்:—

சமரசம்-எல்லாவந்தங்களினது அநதமுந்தனககுபபூர் வமாக்கித்தான் உத்தரத்தினின்றும் மருவியபது. இதற்குநியா யம் விந்துபரவிந்துவென்னு மிரண்டையு மறுக்கச் சுத்தவி ந்து வந்ததுபோலும், சிவம் பரசிவமென்னு மிரண்டையு மறுக்கச் சுத்தசிவம்வந்ததுபோலும், சன்மார்க்கஞ் சிவசன் மார்க்கமென்பவற்றை மறுக்கச் சுத்தசன்மார்க்கம் வந்தது. இதுஷடாந்த சமரச சுத்தசன்மார்க்கமெனக் கூறப்படும். சமயசன்மார்க்கம் மதசன்மார்க்கம் மென்பவற்றுளடங்கிட சன்மார்க்கமனந்தம். அவற்றிற்சமய சன்மார்க்கம் முப்பத் தாறு அவற்றைவிரிக்க ஆறுகோடியாம். ஆறுகோடிமந்திர ங்களுஞ் சமயமதங்களாகக்கூறுப.

சாமானியவிசேடசமரசம்:—ஒன்று பலவாகச் சமயமதங்களில் வழங்குகிற கருத்தர்கள், மூர்த்திகள், ஈசுரன், பிரமம், சிவ முதலிய தத்துவங்கள் காலப்பிரமாணபரியந்தமிருப்பதேயொழிய வதற்குமேலிரா. அதுபோலஷடாந்தவநுபவங்கள் ஒன்றுறைலும் காலம் இடம் முதலியவற்றால் வேறுபடும். வேதாந்தசித்தாந்தமென்னுமிரண்டில் வேதாந்தத்தில் போதாந்தயோகாந்தமும், சித்தாந்தத்தில் நாதாந்தகலாந்தமுமடங்கிவேதாந்தசித்தாந்தமென மருவியது. இவைகளின் விசேடம் ஏகம அனேகம். அஃதாவது சமயத்தில் சிவம்,ஏகம்,பிரமம, அனேகம், மதத்தில் பிரமம்ஏகம் பரவிந்து பரநாதம்அனேகம் சமயாதீதத்தில் பிரமம்முதல் சுத்தபரபிரமம்வரையில் அனேகமென்றுகூறுப. சாதாரணபாகத்தில் கடவுள்ஏகம் சீவர்கள்அனேகம், சுத்தசன்மார்க்கத்தில் கடவுளஏகம் சுத்தமாதிதேகத்தைப்பெற்ற ஞானிகள் அனேகம்.

சமரசதர்மம்அருள்வெளி.—தர்மம் என்பது ஜீவகாருணியதர்மம் சாத்திரதர்மமாம். இவற்றின்உண்மை ஆன்மாவின் தன்மையாம். தன்மை-ஆன்மாவின்சுபாவம், சுபாவம் ஆன்மாவி னியற்கைகுணம். இயற்கைகுணம் தயை, தயை என்பது அருட்சத்தி. இதனைவிருஷபமென்றும், அதன்றன்மையென்றும், அறுதி இயற்கையென்றும் பரஞானமென்றும், பூரணநிட்டையென்றும், அகர உகரமென்றும், அருணடனமென்றும், ஆன்மநெகிழ்ச்சியென்றும், ஆன்ம அசை

வென்றும் அருள்வெளியென்றும் கூறுப. இவ்வருள் வெளியின் தருமத்தால் அசாதாரண காரணமின்ற வடிவிலிருக்கிற அண்டத்தில் ஆன்மா பிரணவ பீடஸ்தானத்தில் சோடசூரியப் பிரகாசமுடையதாக, இருபுறங்கால்பாகம் பொன்மையுங்கால்பாகம், சு, சம்வெண்மை கலந்தவண்ணம் கால்பாகம் நெற்றியில் ஆன்மவிளக்கமுள்ளது. இதனைப் பிந்து அறிவு, பாலம், முச்சுடர், முப்பாழ், நெற்றிக்கண், கபாடஸ்தானம், சபாத்துவாரம், மகமேருகிரி, புருவமத்திமூல மெனக்கூறுப. இவ்வாறு கூடியது ஷடாந்தசன்மார்க்கமெனுஞ் சிற்சபை, சமரச சன்மார்க்கமெனும் பொற்சபை, சுத்த சன்மார்க்கமெனுஞ் ஞானசபை. அஃதாவது ஆன்மபிரகாசமாம். அப்பிரகாசத்துக்குளிருக்கும் பிரகாசமேகடவுள். அதனுள்ளொளியி னடைவு நடனம். ஆன்மப்பிரகாசத்தை மறைக்க மாயாசத்திகளாகிய எழுதிரைகளுண்டு அவைகறுப்பு, நீலம், பச்சை, சிகப்பு, பொன்மை, வெண்மை, கலப்பாம் அவைமுறையே மாமாயா, மாயா, கிரியா, பரா, இச்சா, ஞானா, ஆதி ஆகிய சத்திகள். இச்சத்திகளினீக்கமே திரை நீக்கமென்னப்படும். இத்திரைநீக்கத்தால் சுத்தமாகிமூன்றுஞ் சித்தி. சுத்தமாதி மூன்றின் விபரம்.

## சுவர்ணதேகம், பிரணவதேகம், ஞானதேகம்.

சுவர்ணதேகம்—அணுபரமாணுபட்ச காரியரூப பரத்துவ பரஅறிவு.

பிரணவதேகம்—சம்புபிரகிருதிபட்சகாரியகாரணரூப பரம பரத்துவ பரம்பர அறிவு.

ஞானதேகம்—விபுபட்ச காரணரூபபராபரத்துவ பராபர அறிவு.

இம்மூன்றும்பொன்னின்வண்ணம். பதினாறுமுதல் நூற்றெட்டுமாற்றுக்கடந்தமாற்று. பன்னிரண்டுவயதுடையதும் சாகாக்கால் அநுபவத்தைப்பெற்று ஐந்துமுதல் எட்டுவரையில் சபதமய தெரிசனத்தால் பிணிமூப்பின்மையும் நரை திரை உரைபடாததும் மலம்சலமின்மையும், ஆகாரம், நித்திரை, வேர்வை, தாகம், சாயை ரோமவளர்ச்சி தாழ்ச்சி, முதலியவை இல்லாமையுமாம்; தேகந்தோற்றியுந் தோற்றமலுமாயது.

சமரசானுபவம்—அணுபட்ச பரமாணுபட்சத்தில் விந்து பரவிந்து சுத்தமாயைகடந்தது; பரநாதம் சுத்த மகாமாயை கடந்தநுபவபேதம்; சம்புபட்சத்தில் பிரமன்விஷ்ணு உருத்திரன், மயேசுரன், சதாசிவன், விந்து, நாதம்; பரவிந்து, பரநாதமட்டுமுள்ள அநுபவபேதம்; பிரமன்விஷ்ணு, சுத்த மகாமாயை கடந்தஞானநுபவபேதம், உருத்திரன் சித்தநுபவபேதம், மயேசுரன் ஆனந்தநுபவபேதம், சதாசிவன் சத்தநுபவம், விந்து சிதானந்தநுபவம். நாதம் சதானந்தநுபவம், பரவிந்து சச்சிதானந்தநுபவம், பரநாதம் சிவாநுபவமாம்:—

## சாதனானுபவசித்திபேதம்.

### காமசித்தி, யோகசித்தி, ஞானசித்தி.

காமசித்தி அணிமா, லகிமா, மகிமா பிராத்தி, கரிமா, பிரகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.

யோகசித்தி அஷ்டாங்கயோகசாதனத்தால் அறுபத்து நான்கு சித்திகளுந் தன் சுதந்தரத்தில் நடத்துதல். அவை பிராணகற்ப தேகத்தாலும், சங்கற்ப குளிகையினாலுமாம். பரம்பரமார்க்கிகளால் பிரமகாலவளவை குறித்த சித்திகாலம் பன்னிரண்டு வருஷமுதல் நூற்றெட்டு வருஷத்திற்குள்ளாக அநேகவிதசித்திகளை நடத்துவதாம்.

ஞானசித்தி அறிவு நான்முடியாகிய சுத்தசன்மார்க்க ஞானாநுபவம். அறுபத்து நாலாயிரஞ் சித்தியுந் தன்சுதந்தரத்தில் நடத்துகிற சர்வமகாசித்தியாம். இரசவாதம், பரிசவாதம், தாம்பிரவாதம், தாதுவாதம், உபரசவாதம், வாக்குவாதம், அக்ஷரவாதம், சங்கற்பவாதம், மந்திரவாதம், தந்திரவாதம், புரீஷிகவாதம், தூளனவாதம், வாயுபிரேரகவாதம், தேவாங்கவாதம் என்பனவற்றால் மகாசித்தி சம்பவிக்கும். இவை ஔஷதி சம்பந்தத்தாலும் குருசம்பந்தத்தாலும், எழுத்துகள்சம்பந்தத்தாலும், தியானயோகசம்பந்தத்தாலும், மலமூத்திரசம்பந்தத்தாலும், பாதகுளிகைசம்பந்தத்தாலும், சுவாசசம்பந்தத்தாலும், மூலதாது, சீவதாது, சீவ, தாது மூலசம்பந்தத்தாலும், உபாசனைசம்பந்தத்தாலும்,

அநுதாநுசம்பந்தத்தாலும், சித்திக்கும். சுத்தசன்மார்க்கத்தில் பேதாபேத விலக்கணங்களை வியாசாதிகள் பூர்வ உத்தரமீமாஸ்சங்களில் கூறியதுபோல் சுத்தசன்மார்க்கத்தில் கற்ப விகற்ப, சங்கற்பத்தால் காமசித்தி, யோகசித்தி, ஞானசித்தி லேசங்களில் ஞானசித்தியால் கூறுவதாம்.

சாதாரணசாமானியசங்கற்பம் [illegible]கடவுள் இடபவாகன ரூடராய் உலகத்தில் எழுந்தருளிக் காட்சி கொடுத்தருளுங்காலம். இடபம் என்பதன்பொருள் தருமஸ்வரூபமாம். தருமஸ்வரூபம் தயையாம்.

சாதாரணவிசேட சங்கற்பம். இச்சங்கற்பவாதத்தால் நினைப்பு மறப்பு சனனமரணமும் இறந்தாலெழுதலும் முத லியவற்றின் நியாயங் கூறப்படும், நினைப்புமறப்பே சனன மரணம். நினைப்பென்பது தத்துவக் கூறுபாடுமேலேறிவே றொன் றுறப்பற்றல் இதுசகலம். விழிப்புமேலேறல் பிரஞ் ஞையோடிருத்தல் என்று கூறப்படும். மறப்பென்பது தத் துவத்தின்ஆவி அதிக்கிரமித்தல்இதுகேவலம் தூக்கம். கீழ்ச் செல்லல் பிரஞ்ஞையில்லாதிருத்தல்என்றுகூறப்படும். ஈண்டு கூறியபடி அனுபவசூத்ர அபக்குவதிருட்டியில் எழுவகைப்பி றப்பாம். கற்பத்தில் ஐந்துமாதம்வரையில் குழவியாயிருப்ப தொன்று, அவயவாதி உற்பத்திகாலம் இரண்டு, பிண்டம் வெளிப்படுங்காலம்மூன்று குழந்தைப்பருவகாலம் நான்கு, வாலப்பருவகாலம் ஐந்து, குமாரப்பருவகாலம்ஆறு, விருத் தப்பருவகாலம் ஏழு. அன்றியும் மனோவிருத்திகாமம், வெ

குளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை. இவற்றையொழித்தலென ஏழாயிருத்தலின் மனோசங்கற்பங்க ளெல்லாம் பிறவிகளாம். காரணப்பிறப்பு ஏழு, சூட்சமப்பிறப்பு ஏழு, ஸ்தூலப்பிறப்புஏழு, சாக்கிரப்பிறப்பு ஒன்று, சொப்பனபிறப்பு ஒன்று, சுழுத்திபிறப்பு ஒன்று, சாக்கிரத்தில் சொப்பனபிறப்புஒன்று, சாக்கிரத்தில் சுழுத்திப்பிறப்புஒன்று, சொப்பனத்தில் சொப்பனப் பிறப்பு ஒன்று, சொப்பனத்தில் சுழுத்தி பிறப்பு ஒன்று என பிறப்புப்பலவகையாம். இப் பிறப்புகளற்று நித்திசயானந்தமா யருள்வடிவாவதே சுத்தசன்மார்க்கத்தில் "செத்தாரெழுந்தனர். சுத்தசன்மார்க்கஞ் சிறந்தது" என்றதன்பொருளாம். இஃதன்றியுஞ்செம்பிலே இயற்கையாயுள்ள களிம்பு பரிசனவேதியினுல் நிவர்த்திக்கக்கூடியதுபோல் அணுபக்ஷ அபக்குவ சிருட்டிகளாகிய மாயாகாரிய தேகத்தில் வாதபித்த சிலேத்துமத்தால் சிறிய பிணிகளும் தத்துவ ஆபாசத்தால் பெரும்பிணிகளும் வாரா வகை சுத்த உடம்பாக்கிக் கொள்வது ஒருவாறன சுத்த சன்மார்க்கசாதனம்.

சமவாயகரணசமபந்தசங்கற்பம். ஒற்றுமைவேற்றுமை யுடைய மட்குடத்தைப்போல் சங்கற்பவாதம் பலவாம். சங்கற்பம், ஐந்துவகைத்தாம் அவை நிர்விகற்பம், சவிகற்பம், சங்கற்பம், விகற்பம், கற்பம் என்பன. அவற்றுள் நிர்விகற்பம்-கடவுள் அறிவு, சவிகற்பம்-அதனது வியாபகம், சங்கற்பம்-யாதொன்றிலும் பற்றின்றி சுத்தமாகவிருந்தகாலத்தில் தோன்றியசைவாகிய நினைப்பே முன் அசைவின்றி

அசைந்த அசைவாகிய மேலசைவென்னும் புடைபெயர்ச்சி யேக காலத்து மரணமடைய மாட்டோமென்றமுந்தியபிரஞ் ஞை. விகற்பம்:—மேற்குறித்தவைகளின் அனுசந்தானம். கற்பம்—பிரமசதா சிவகாலஅளவை குறித்தல்.

## விசேடநியாயம்.

சங்கற்பம்—ஆன்மதிருஷ்டி, விகற்பம்—சிவதிருஷ்டி யைச் சிந்தித்தல், கற்பம்-பிரமசதாசிவகாலஅளவை குறித் தல்; இக்கற்பம் மஹாகற்பம், அவாந்தரகற்பம் என இரு வகைபடபடும்.

மஹாகற்பம்—மூலப்பகுதியினின்றுண்டாஞ் சிருஷ்டி முதல் பிரமாவின் ஆயுள்வரையில் ஏற்பட்டுள்ளகாலம். அ வாந்தரகற்பம்—சதுர்முகப்பிரமனுடைய ஒருநாட்குரியகா லம். இவ்விரண்டுகற்பத்தி னடுவே யொவ்வொரு வொடுக்க முண்டாகின்றது. அது நித்திய நைமித்திக பிராகிருதிக ஆத் தியந்திகம் எனநால்வகைத்தாம். இவற்றுள்மரணமே நித்தி யப்பிரளயம், பிரமனுடைய கற்பமுடிவிலுண்டாகின்றவொடுக் கமெதுவோ அதுநைமித்தியப்பிரளயம், மகத்துவமுதல் வி சேடபரியந்த மொடுக்கத்தை அடைவது பிராகிருதபிரள யம், தத்துவஞானத்தால் யோகிக்குப் பிரமத்தினிடத்திலு ண்டாகும் ஒடுக்கம் ஆத்தியந்திகப்பிரளயம். திருவருட்பிர காச வள்ளலார் ” எல்லாஞ் செயவல்ல சித்தர் தம்மையுறு ம் போதிறந்தாரெழுவர்”, “செத்தாரெழுவரென்று கைத் தாளம்போடு “என்று திருவாய் மலர்ந்தருளியபாக்களிற் குறிப்பித்தவையெலாம்“ யோகமாந்தர்களுக்குக் காலமுண்

7

டாகவேயுரைத்தேன்'' என்றருளிபிருத்தலின்திருவருட்பா ஆறுவது திருமுறைகளிலுரைத்தவைகளெல்லாம் யோகமாந்தர்க்கேயன்றி மோகமாந்தர்க்கல்ல.இதனைநன்குணராதார் பல பிதற்றியென்பயன். மோகமாந்தர்கள் நித்தியப் பிரளயமாகிய மரணப்பெரும்பிணியால் செல்லும்பிணியாளர்களாதலால் இவர்கள் திருவருட்பாவிற்கனதிகாரிகள். யோகமாந்தர்களென்னும் ஞானநிஷ்டர்களே அதிகாரிகளாவர். மனித தேகத்தில் பிரமபதம், விஷ்ணுபதம், உருத்திரபதம், மயேசுரபதம், சதாசிவபத முதலிய பதங்களிருக்கின்றனவென்பதுயோக நூற்றுணிபாம். அவை மூலாதாரம் சுவாதிஷ்டானம் முதலியன. ஈசனிருக்குமிடம் கண்டமுதல் உச்சிவரையிலாதலின் அதுசுவர்க்கமென்றும், இயமனிருக்குமிடம் உந்திமுதல்குதபரியந்தமாதலால் அதுநரகமென்றும்கூறப்படுதலின் யோகமாந்தர்கள்யோகசித்திவல்லபத்தால் தாரகயோகத்தில் மேற்படி பதங்களின் மேற்சென்று அமிர்தத்தையுண்பதே சாகாத்தலை, வேகாக்கால், போகாப்புனல் என்று கூறப்படும். இங்ஙனே மடைவதே இறந்தாரெழுந்தனரென்பதன் கருத்தாம். ஞானசித்தியில் பிரணவவனுசந்தானஞ்செயயுமிடத்துப் பிரணவமேவில்லும் சீவனே அம்பும் பிரமமேகுறியாம். ஞானயோகநாதவுபாசனையினால் சுத்தம் பிரணவம், ஞானமென்றுந் தேகசித்தியுண்டாம்.

திருவருட்பா.

"துரியமலைமேலுளதோர்ஜோதிவளநாடு
தோன்றுமதிலையர்நடஞ்செய்யுமணிவீடு

தெரியுமதுகண்டவர்கள் காணிலுயிரோடு
செத்தவரெழுவாரென் றுகைத்தாளம்போடு."

"ஓங்காரவணைமீதுநானிருந்ததருண
மூவந்தெனதுமணவாளர்செவந்தவடிவகன்றே
ஈங்காரப்பளிக்குவடிவெடுத்தெதிரேநின்று
ரிருந்தருள்கவெனவெழுந்தேனெழுந்திருப்பதெனநீ
ஆங்காரமொழியென்றுரொழித்தனனப்போது
நான்றுதேனவர்தானே வதிந்திலன் முன்குறிப்பை
ஊங்காரவிரண்டுருவமொன்றுதே மாங்கே
வுரைத்தவநுபவந்தோழி நிறைந்தபெரு வெளியே."

மேற்கூறிய பாக்களிற் குறிப்பித்த படியாதலே சுத்த சன்மார்க்கபயன் என்றுஞ் சாகாக் கல்வியென்றுங் கூறப்படும்.

## திருவருட்பா.

இறந்தவர்கள் பலருமிங்கே யெழுகின்ற தருணமிதே யென்றுவாய்மை, அறந்தழையவுரைக்கின்ற வார்த்தைக ளென்வார்த்தைகளென்றனை கின்றரால், மறந்தசிறியேனு னுரைக்கவல்லனே எல்லாஞ் செய்வல்லோயுன்றன், சிறந் ததிருவார்த்தையெனத் தெரிந்திலா விம்மனிதர் மதித்திற மை யென்னே.

செத்தாரையெல்லாந் திரும்பவெழுப்புதலிங்
கெத்தால்முடியுமெனிலெம்மவரே - சித்தாம்
அருட்பெருஞ்சோதியதனால்முடியும்
தெருட்பெருஞ்சத்தியமீதே.

திருமந்திரம்.

செத்தார்பெரும்பயனாவது வேதெனில்
செத்துநீர்சேர்வது சித்தினைக் கூடிடிற்
செத்தாரிருந்தாற் செகத்திற்றிரிமலஞ்
செத்தார் சிவமாகியே சித்தர்தாமே.

சிவயோகிஞானிசிதைந்துடல்விட்டாற்
றவலோகஞ் சேர்ந்து பின்தான்வந்துகூடிச்
சிவயோக ஞானத்தாற் சேர்ந்தவர் நிற்பர்
புவலோகம் போற்றுநற் புண்ணியத்தோரே.

மேற்கூறிய பாக்களிற் குறித்தபடி குணம்புதைய உயிரடக்கங் கொள்ளுதலும், மலஞ்சாதலும், உடல் சிதைந்து நசித்தலும், சீவஈசுர சைதனியங்கள் அஸ்தி பாதி பிரியநாமரூபங்களாலும், சாக்கிர சொப்பனசுழுத்திதுரியம் துரியாதீதம் மூர்ச்சை மரணம் என்னும் அவஸ்தைபேதத்தாலும், பல்வேறுபட்டுப்போகின்றமையையுணராதுவீணேஉழல் உறக்கநிலையில் அலையும் மோகமாந்தர்கள் கூறும் பொய்ம்மைவழக்கையொழித்து, யோகியர் சைவ வைணவ பிரம சௌர சாத்தமுதலிய சமயவாதியர்களாலும் அநுட்டிக்கும் நாதாநுசந்தான உபாசனையினாலும் தியானயோகங்களின் முறையே சொரூப நிட்டையிலும் சகசநிட்டையிலும் காம வெகுளி மயக்கம் என்னும்பகையை யறுத்துப் பொறிபுலனை வென்று வீடுபேறடைதலும், அதனைத்தன்குணத்தோடு அடங்கியிருக்கின்ற கடவுளுடையசத்தியைப்பார்க்கின்றவர்களாகின்றார்கள் என்பது உபநிடத்தமதார்ரகளின் ஞானம்

புதைக்க உயிரடக்கங் கொண்டதெனவும்; அத்தியான்ம பரிச்சேதத்தை விட்டு அதாவது ஜீவன்புறசமயங்களால் கட்டுண்டிருந்த முடியவிழ்த்தலே மலைமேலேற்றுதலெனவும், அப்போதும் இறந்து சிவத்தோடு இரண்டறக்கலத்தலும், பாவனைமாத்திரமாயுள்ள மயக்கவடிவமாகிய கேவலாவத்தைபிறத்தலும், விகற்பவடிவாயுள்ள சகலாவத்தை பிறத்தலும், பொதுவடிவாகியபொறிவாயுக்களைச்சேர்ந்தசூக்குமவுடம்பு அதாவது இலிங்கசரீரம் வேறோர் உலகஞ்செல்லுதலுமே செத்தாரிருந்தார் எனவுங்கொள்க. என்றும் எலும்புதசைமுதலியவற்றால் கருமமாகிய கயிற்றினால் கட்டப்பட்டுள்ளதூல உடம்பாதலால் மோகமாந்தர்கள் நித்தியப்பிரளயமெனும் மரணாவஸ்தையடைதலும், கிருதயுகத்தில் பிராணன் எலும்பழியாமலிருக்குமட்டும், திரேதாயுகத்தில் தசையுள்ளமட்டும், துவாபரயுகத்தில் இரத்தவலிவுள்ளமட்டும், கலியுகத்தில் அன்னவலிவுள்ளமட்டும் பிராணனிருப்பது ஆதலால், உடம்புஅழிதல் நியதியாம். இதைநிலத்திற்புதைத்துவிடில் கிருமிகளாகி யழியும், சுட்டாற்சாம்பராகும், உடம்பைவெறுத்து நிலத்திலிட்டால் புறத்துள்ள செந்துகள் தின்றுவிடும். இது மோகமாந்தர்க்குரித்தானவை. வேறோருற்றான்கூறப்புகின் வைதீகசிலர் பஸ்பமெனவும் மந்தரசமஸ்காரத்தால் ஓமஞ் செய்யப்பட்டது சாம்பல்முதலியவற்றிற்கு உபலக்கணமாகி நின்றதெனவுங் கூறுவதுமுண்டு:—

## ஏமவித்தை.

ஏமம் கனகம் என்பன சூரியனைக்குறிப்பிக்கும்பதங்களாம்.

## உத்தரம்சாயாணியவிசேடசமரசநியாயம்.

சூரியனிடத்தில் பொன்னைப்போல் பிரகாசிக்கும் அறிவுருவான புருடனொருவனுளன். அவன்சத்தியன் சோபாதிக முடையவன் சிவனது அஷ்டமூர்த்தத்தி லொருவன் விஷ்ணுவினுடைய இருப்பிடமூன்றனுள் சூரியமண்டல மொன்றாதலின் அப்புருஷன்மண்டலரேகையால் மூடப்பட்டுப் பூகோளத்தில் விஷூவன் விஷூவத் புண்ணியகாலமெனப் பெயருடையவனவன். கிராந்திமண்டலவட்டத்தால் தெற்கு வடக்கில் சூரியகோளம் இருபத்து நான்குபாகம் சாயஅதனால் அதுவடக்கே சாய்ந்து அங்கிருந்து தெற்கே புறப்படுங்காலந்தக்ஷிணாயண தூமாதி மார்க்கமெனவும், தெற்கிருந்து வடக்கே புறப்படுங்காலுத்தராயண அர்ச்சிராதிமார்க்கமெனவுங் கூறப்படும். சீவதேகங்களினுந் தேவதேகங்களினு மிருப்பது சத்தியமொன்றே யெனக்காயத்திரி முதலிய மந்தரவாதத்தால் சூரியனை உபாசித்து அவ்வுபாசனையின்மிகுதியால் சூரியமண்டலத்தை பேதித்து உத்தராயணகாலத்தில் அர்ச்சிராதி மார்க்கத்தால் கைலாசம்வைகுந்தம்மென்னுஞ் சுவர்க்கப்பேற்றையடைவதும் அவ்வுபாசனை யின்றி அக்கினி ஹோத்திரமுதலிய கருமவுபாசனையால் தக்ஷிணாயணகாலத்தில் தூமாதிமார்க்கத்தால் சந்தரமண்டல மடைவதும் சகுணமுத்தியாம். இவ்விரண்டிற்கு மதீதமாதலேநிர்க்குண முத்தியாம். இவைசுத்தசன்மார்க்கத்தில் உத்தரம் ஏமசித்தியெனக் கூறப்படும்.

## உத்தரோத்தரம் தேகசித்தி ஏமசித்தி.
## விசேடநியாயம் சூதம்.

மதசனமார்க்கிகளாகிய யோகமாந்தர்கள் மந்தர,தந்தர,அக்ஷர மூலாக்கினிகமந ஆரோகண தசநாடி ஐக்கிய

ரேசகபூரககும்பக நாத பிரணவ சத்திவசனைமுதலிய அங்கபபிராணுயாமத்தால் ஏகாக்ரநிலைவாய்த்தற் கேதுவாதல் போல் சுத்தசன்மார்க்கத்தில் மூலசீவதாதுக்களாகிய பௌதிகங்களினுல் காயசித்திக்கு ஏதுவாதல் உத்தரோத்தரம் ஏமசித்தியெனச் சுத்தசன்மார்க்கத்தில் கூறப்படும். இதுவிந்துவின் சாமானிய விசேடசமவாய சையோகத்தால் ஜீவதாது வென்னுஞ் சூதமாம். இதுபௌதிக அண்டபிண்டங்கட்குச் சாமானியசாதாரணகாரணமாயது. இச்சூதத்தின் சொரூபரூபசுபாவ வியாபக வியர்ப்பிய விசேடசையோக சம்பந்தங்களை விசாரித்தல் வருமாறு.

(ந ம சி வ ய) ந - பிருதுவி. மூலம் மூலிகை; ம-அப்பு சீவன் உப்புகள்; சி-தேயுதாது, பாஷாணங்கள்; வ-வாயு, மூலதாது-உபரசங்கள், ய-ஆகாசம் ஜீவதாது-சூதம்.

**மூலம்**—செவ்வாழை, பேயன்வாழை, கற்பூரவாழை, சதுரக்கள்ளி, செஞ்சதுரக்கள்ளி, கொடிக்கள்ளி, இலைக்கள்ளி, திருகுக்கள்ளி, நாயுருவி, கருப்புநாயுருவி முதலியனவாம்.

**ஜீவன்**—ஏகம்பாசாரம், சீனம், காரம், சூடன், அமுரியுப்பு முதலியனவாம்.

**தாது**—அஞ்சனபாஷாணம், அபிரகம், அவல்பாஷாணம் இலிங்கம், கந்தகம், காட்டுத்தாளகம், கற்கடகபாஷாணம், கற்பரி, கற்பாஷாணம், காந்தம், கார்முகில், குதிரைப்பல், கெவுரி, சங்கு, சவ்வீரம் முதலியனவாம்.

**மூலதாது**—துருசுபொன்னிமிளை, அபிரகம், வெள்ளிமிளை, காந்தம், கற்பூரச்சிலை, கல்நார், சாஸ்திரபேதி, கல்மதம், நீலாஞ்சனம், கருங்கல் நீலபடிகக்கல் சுக்கான்கல், இராசவர்தம், கெருடக்கல், ஓடுமுதலியன உபரசங்களாம்.

## ஸ்ரீ வசநாது சூதம்.

இச்சூதம் இரண்டுவகை. முதலாவது இரசம் இரண்டாவது செவ்வாழையில் வெளிப்பட்டவிந்துநாதம் இதனை அமுரியுப்பு என்றுங் கூறுவர்:—

## இச்சூதம் இதுவென்பது.

### திருவருட்பா.

ஓதவடங்காது மடங்காது தொடங்காது
யோகையொடுங்காது மடங்காது நடுங்காது
சூதமலங்காது விலங்காது கலங்காது
சோதிபரஞ்சோதிசுயஞ்சோதிபெருஞ்சோதி

ஏதமுயங்காது கயங்காது மயங்காது
வேறிபிறங்காது உறங்காது கறங்காது
சூதபிணங்காது பிணங்காது வணங்காது
சோதிபரஞ்சோதிசுயஞ்சோதிபெருஞ்சோதி

### திருமந்திரம்.

போகத்தையுள்ளவே போகாதுவாயுவு
யோகதலைத வெள்ளியுநீளும் வியாழத்தில்
சூதொத்தமென்முலை யாளுநற்சூதனுந்
தாதிற்குழைந்து தலைகண்டவாறே.

கண்டனுங்கண்டியுங் காதல்செய்யோகத்து
மண்டலங்கொண்டிருபாலும் வெளிநிற்கும்
வண்டியை மேற்கொண்டுவானீருருட்டிடத்
தண்டொருகாலுந் தளராது வங்கமே.

அங்கப்புணர்ச்சியுமாகின்றதத்துவ
மங்கத்தில்விந்து வருகின்றபோகத்துப்

"பங்கப்படாமற்பரிகரித்துத்தம்மைத்
தங்கிக்கொடுக்கத்தலைவனுமாமே".

பாக்களிற் கூறியபடி இச்சூதம் ஒன்றிற் காரியப்படாது தனது தருள் வல்லபத்தா லெல்லாவற்றையுந் தானுட் கொண்டு தானாகி வாங்கல் விடல் மேலேறுதல் கீழ்ச் செல்லுதல் தன் மாட்டும் எதிரிட்ட வஸ்துவின் மாட்டும் அடங்காமையுந் தனது ராகாதிகளால் அறுபத்துநான்கு சத்திகளாகிய தாதுக்களையும் நூற்றெட்டுப் பேதங்களாகிய உபரசங்களையுந் தனது சொரூபமாக்கிக் கற்பூரத்தைப் போல் தான் ஒன்றுமாகாது பிரகாசித்தலாம். இதனைச் சோதி, சுயம்புவெனக்கூறுவர்.

---

## சூதத்தின் சாமானிய காரண சிருட்டி.

### திருமந்திரம்.

ஓங்காரியென்பாளவளொருபெண்பிள்ளை
நீங்காதபச்சை நிறத்தினையுடையவ
ளாங்காரியாகியேஐவரைப்பெற்றிட்டு
றீங்காரத்துள்ளேயினிதிருந்தாளே.

என்றபடி ஓம் (எ-து.) அகர, உகர, மகர, சிகர, வகர, யகரமாம்; இவைகள் அகரம்-உயிர், உகரம்-பரம், மகரம்-மலம், சிகரம்-சிவம் (சுட்டசாம்பல்). வகரம்-வடிவம், யகரம் சூதம், இச்சூதமே அண்ட பிண்டமாம். சூதம்-உபரசம், கெந்தி-காரசாரம், பொன், அண்டமெனவும், விந்து. மூலைப்பால், நாகம், அமுரி, மலம், பிண்டமெனவும், இவைகள் அக்நி, பிருதிவியிரண்டின் சையோகத்தால் பழச்சாறு நாகமாய்ப் போகாப் புனலெனவும், அப்பு, கவா இரண்டின் சையோகத்தால்

பூநீரே நடுச்சாறு வங்கமாய் வேகாக் காலெனவும், ஆகாசத்தின் குழிச்சாறே வழலை நிமிளையாய் சாகாத்தலை யெனவும் இவைகள் "ஆறு தெருவி லகப்பட்ட சந்தியில் சாறுபடுவன" வென்ற திருமந்திரச் செய்யுட்கிணங்க ஆறு விடங்களிலும் உதக வேதை, நிறம், மணம், சுவை, பரிட்சை, குணம்; பகல், இரவு ஜாமங்களில் நிற பேதங்களை தெரிந்து உதகமெடுத்து அவ்வுதகத்தில் பூநீர் சேர்க்க அமுரிக்குருவெனவும் (பூ-பிரமன், நீர்-விஷ்ணு) மண்ணுஞ் சலமுங் கலப்புற்றுப் பறங்கி வைப்பாலாயது பூத்த சுன்னமாம். அவை வழலை சவுக்காரம். அவைச் சிறுநீராற் காச்சுகின்ற வழலை, சுண்ணும்பும், உப்புங் கூட்டிக் காச்சுகின்ற வழலை. உவர்மண், வீரம், வெள்ளை முதலியவை சேர்த்துக் காச்சுகின்ற வழலையாம். இதனையே அமுரிக்குருவென்பர். இக்குருவால் காயசித்திக்குரிய மகா மூலிகைகளை உண்ணுவது.

மகா மூலிகைகளாவது.

சுணங்கன், சோதிவிரமம், செந்தாடு, பாவை, சாயா விருட்சம், சாய்கை வேதி, மூவிலைக்குருந்தி, கற்றாமரை, கருநொச்சி, கருநெல்லி, பொற்சீந்தி, செந்திராயி, நீலவேலி, வெண்புரசு.

செம்பு மூலிகைகளாவது.

அவுரி, ஓரிதழ் தாமரை, பிளியரணை, கோவை, சிவந்த கொடி வேலி, சிறிய கீரை, பிடார மூர்க்கி, கரிசாலை, அங்கிஷபாதி, செவ்வல்லி, கறுஞ்செம்பை, செங்கீரை, தும்பை, பொற்றலை.

## ஈய மூலிகைகள்.

சுரை சீந்தி, பொன்னுங்கண்ணி, சிறுபூளை, விழுதி, செருப்படி, முசுட்டை, உத்தாமணி, வெள்ளை குன்றி, வெள்ளறுகு, வெள்ளைச்சாறணை, வெதுப்படக்கி முதலியவை யாம். இம்மூலிகைகளின் சமுதாய குணங்களையும் விந்து நாதத்தாலும, வஸ்துக்களின் சத்துரு மித்துருக்களாலும், ஒவ்வொரு பூதியங்களும் வஸ்துவின் சேர்மானங்களும், இனங்களும், கரு சோதனைகளும், உப்பு, பாஷாணம், உபரசம், லோகம் இவற்றின் பிறப்புகளும், நீற்றினம, உருக்கினம், செந்தூரவினம், வர்ணவினம், கட்டினம் முதலிய வினங்களும் பத்துவகை மித்திரங்களும், புடமார்க்கம, எரிபுதிட்டம் ஊற்றின் குறி, அஷ்ட கர்மவாதக் கருத்தொழில்களும், கட்டு வரிசைகளும, இனங்களும், ஆதிக்குருக்களும், குரு முடிக்குங் காலங்களும், செயநீர் காலம், உருக்கினங் காலம், திராவக காலம், சாறணை, செந்தூரமுடிக்குங் காலங்கள் தெரிந்து முதலில் குருமுடித்து அக்குருவால் பரிசவேதை முதலியவைகளை முடிப்பது. இங்ஙனம முடிதலே உத்தரோத்தரம் சித்தி ஏம சித்தியாம்:—

## திருவருட்பா.

" நரைதிரைமூப்பிவைநண்ணுவகைதரு
முறைதருபெருஞ்சீருடையநன் மருந்தே "
" என்னைதாஞக்குமருந்து இங்கேஇறந்தாரையெல்லா
மெழுப்புமருந்து துன்னுமெய்ச்சோதிமருந்து "

திருமந்திரம்.

" நரைதிரைநீக்கிநகரவல்லார்க்கு
நரைதிரைமாறுநமனுமங்கில்லையே "
" வீரமருந்தென்றும்விண்ணோர்மருந்தென்றும்
நாரிமருந்தென்றும்நந்தியருள்செய்தா
னாதிமருந்தென்றறிவார்களிடஞ்
சோதிமருந்திதுசொல்லவொண்ணாதே.

என்று பாக்களிற் குறித்தபடியாதலே சுத்த சன்மார்க்க ஏம வித்தையின் பயனும் "ஈசனிருப்பதுவெமத்தொழிலிலே" என்ற தனைமதிக. விரிக்கிற்பெருகுமாகலின் சுருக்கியுரைத்தனம்.

ஷடாந்த சமரச சுத்த சன்மார்க்க தீபிகை
முற்றிற்று.

திருவருட்பிரகாசவள்ளலார் திருவடிகளே துணை.

---

[illegible]
[illegible] வே. [illegible]
[illegible]